# மேலும் லைப்பாய் பழக்கத்தை அவள் கற்றிருக்கிறாள்!

அவள் இப்பொழுது தாயாருக்கு உதவி செய்துகொண்டு, தன் வாழ்க்கைக்கு அறிய வேண்டுவனவற்றைப் படிப்படியாக அறிந்து வருகிறாள். நாள்தோறும் லைப்பாய் சோப்பை உபயோகிக்க தாயும் அவளுக்குக் கற்பிக்கிறாள். ஒவ்வொரு குடும்ப ஆரோக்கியத்திற்கும் சந்தோஷத்திற்கும் ஆபத்தான அழுக்கு அபாயத்திலிருந்து தப்பித்துக் கொள்ள அவளுக்கு பாதுகாப்பை அளித்திருக்கிறாள்.




**லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.**

**அது ஒரு நல்ல பழக்கம்.**

LEVER BROTHERS (INDIA) LIMITED

# தஞ்சையில் பிரபல திருமணம்



தஞ்சை நகரசபைத் தலைவரும், பிரபல மிராசுதாருமான ராவ்பகதூர் எ. ஒய். அருளானந்தசாமி நாடார் அவர்களது கனிஷ்ட குமாரன் சிரஞ்சீவி ஒய். எ. அற்புதசாமிக்கும், தஞ்சை பிரபல மிராசுதாரரான திரு. எஸ். எ. இரத்தினசாமி நாடார் அவர்களது குமாரத்தி திருநிறைச் செல்வி நம்பிக்கை மேரி அம்மாளுக்கும் தஞ்சை பூக்காரத் தெரு சேசுவின் திரு இருதய ஆண்டவர் தேவாலயத்தில், ராஜஸ்ரீ குரு மிகவும் சங்கைக்குரிய எம். மோத்தாவாஸ சுவாமி அவர்களால் பரிபாலிக்கப்பட்ட திவ்ய பூஜையில், திருமண வார்த்தைப் பாட்டுடன், மெய் விவாகம் 11-7-45 புதன்கிழமை காலை சிறப்புடன் நடைபெற்றது அவ்வமயம் கோயில் விசேஷ கொடிகளாலும், என்றும் மங்காப் பசுமைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்ததுடன், குருமார்களாலும், கனவான்களாலும் நிறம்பியிருந்தது.

சேசுவின் திரு இருதய ஆண்டவர் தேவாலயத்தைச் சார்ந்தவர்களாலும் ஸெண்ட் பீடர்ஸ் ஆங்கிலப் பள்ளியைச் சார்ந்தவர்களாலும் விசேஷ சங்கீதம் பாடப்பட்டது.

பிரத்யேகமாக விசேஷித்த முறையில் தயாரிக்கப்பட்டிருந்ததும் ரூ. இரண்டாயிரத்து ஐந்நூறு மதிப்புள்ளதுமான குருமார் அணிந்திருந்த ஆடையை ஸ்ரீ நாடார் அவர்கள், இத் திருக்கல்யாண ஞாபகார்த்தமாக திருக்கோவிலுக்கு அன்புடன் அளித்தார்கள். அழகிய ஆடைகளாலும், விலையுயர்ந்த அணிகளாலும், வண்ணம் நிறைந்த மலர்களாலும் தம்பதிகள் அதிக வனப்புடன் காட்சி அளித்தனர்.

திருமண வைபவத்திற்குப் பின் தம்பதிகள் முக்கிய வீதிகளின் வழியாக ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர். அலங்கரிக்கப்பட்ட யானை முன்னே செல்ல அழகுபடுத்தப்பட்ட பொய்க்கால் குதிரை பின் தொடர, அய்யம்பேட்டை வேணு, நீடாமங்கலம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை கோஷ்டியாரின் நாதஸ்வரம் முழங்க, ஊர்வலம் மணமகனது இல்லத்தை அடைந்தது.

அலங்கரிக்கப்பட்ட பெரிய பந்தலில், உத்தியோகப் பற்றற்றவர்களும், உத்யோகஸ்தர்களுமான பிரபல கனவான்கள், ஜில்லா முழுமையிலுமிருந்தும் விஜயம் செய்து வீற்றிருந்தனர். தம்பதிகளுக்கு கரந்தை தமிழ் சங்கம், கத்தோலிக் யூனியன், மற்றும் பல சங்கங்கள், பிரபலஸ்தர்களால் வாழ்த்துப் பாக்கள் படித்தளிக்கப்பட்டன.

தம்பதிகளது திருமணத்தைப் பாராட்டி, மாகாணத்தின் பல பகுதிகளிலிருந்து விலையுயர்ந்த பல வெகுமதிகளும், மதிப்பிற்குரிய பல வாழ்த்துச் செய்திகளும் வந்தன.

சென்னை, வெராபபொலி ஆர்ச் பிஷப்புகள், திருச்சி, பெங்களூர், கோவை, மதுரை, வேலூர், கோட்டூர், தூத்துக்குடி முதலிய இடங்களிலுள்ள பிஷப்புகள், மே. த. கவர்னர் தம்பதிகள், திருவாங்கூர் திவான் ஸர். ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், ஸர். பி. டி. ராஜன், திவான்பகதூர் டி. எம். நாராயணசாமி பிள்ளை, ஸ்ரீ ஸி. கே. விஜயராகவன் ஐ. ஸி. எஸ்., ஸ்ரீ பாஸ்கரராவ் ஐ. ஸி. எஸ், ஸ்ரீ அனந்தநாராயணன் ஐ. ஸி. எஸ், கான்பகதூர் முஹம்மத் இஸ்மாயில் சாஹிப் பகதூர், திவான் பகதூர் எம். ரத்னசாமி, எஸ். முத்துசாமி அய்யர், ஸ்ரீமதி ரானலைன, ஸி. வி. நரசிம்மன் ஐ. ஸி. எஸ்., கான்பகதூர் ஜனாப் கலீபுல்லா சாஹிப், டாக்டர் பி. சுப்பராயன், தேவகோட்டை ஜமீன்தார், ராவ்பகதூர் வி. வி. ராமசாமி, மிஸ்டர் ரோச் விக்டோரியா, ஞானநிக்கம், ஸெண்ட் ஜோஸப் காலேஜின் ரெக்டர், ஸி. ராமானுஜாசாரியார், ஸர்தார் வேதரத்னம், டி. எஸ். சொக்கலிங்கம் எம். எல். ஏ., ஆசிரியர் 'தினசரி' என். ராமரத்னம், ஆசிரியர் 'பாரததேவி', திருவனந்தபுரம் சீப் ஜஸ்டிஸ் டி. எம். கே. மற்றும் பிரபல நாடக கம்பெனியார், பிரபலஸ்தர்கள் வாழ்த்துக்கள் குறிப்பிடத்தகுந்தவை.

ஏராளமானவர்களுக்கு அன்னதானம் செய்யப்பட்டது.

மாலை, கோகிலகான இசைவாணி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் கோஷ்டியின் இன்னிசையும், மறுநாள் மாலை, அகில இந்திய வேணுகான நாதஸ்வர சக்ரவர்த்தி ஸ்ரீ டி. என். ராஜரத்னம் கோஷ்டியாரின் நாதஸ்வரமும், பல ரஸிகர்களால் சுவைக்கப்பட்டது.

ஸ்ரீ அய்யாத்துரை பாகவதர் கதாகாலக்ஷேபம் செய்தார்.

நடன கோஷ்டியினர், பொய்க்கால் குதிரை கோஷ்டி முதலியவர்களுக்கு தங்க மெடல் பரிசளிக்கப்பட்டது.

## கர்ணபூஷணம்

ராவ்பகதூர் அருணாசலசாமி நாடார் அவர்களது சகோதரர், திரு எ. ஒய். எஸ். பரிசுத்த நாடாரின் கனிஷ்ட குமாரன் செல்வன் எஸ். பி. பெஞ்சமினுக்கும், நாடார் அவர்களது ஜ்யேஷ்ட குமாரன் ஒய். எ. ஆரோக்கியசாமி நாடாரின் ஜ்யேஷ்ட குமாரத்தி மேரி அல்போன் சோவுக்கும் 11-7-45 காலை கர்ண பூஷணம் சிறப்புடன் நடைபெற்றது.

---

குறிப்பு:—ராவ்பகதூர் எ. ஒய். அருணாசலசாமி நாடார் அவர்கள், தனக்கு அனுப்பியிருந்த ஏராளமான வாழ்த்துச் செய்திகளுக்காகவும், பாராட்டுதலுக்காகவும் தனது நன்றியை இதன் மூலம் தெரிவித்துக்கொள்கிறார்.



## “மேம்பட்ட தோழமை”

ராயல் இந்தியன் ஆகாயப் படையில் பைலட்டுகளாக, நல்ல கல்விப் பயிற்சியும் திடமான தேகக் கூறும் மட்டுமிருந்தால் போதாது. துணிவு, உழைப்பு, தைரியம்—இவைகளும் கட்டாயம் இருக்க வேண்டும். அவர்கள் தீரத்தினுடையவும் திறமையினுடையவும் பயனாக எத்தனையோ ராயல் இந்தியன் ஆகாயப்படை பைலட்டுகள் இந்த யுத்தத்தில் அபரிமிதமான காரியங்கள் ஏற்கெனவே செய்து முடித்திருக்கிறார்கள். இதுபோன்ற தோழமைக் குரித்தாவது ஒரு விசேஷமான உரிமைக்கும் மேலானதாகும். அதை ஒரு பெரும் கௌரவமென்றே கூறத்தகும். இன்று, ராயல் இந்தியன் ஆகாயப்படை பைலட்டுகள் இந்தியாவின் பாரம்பரியமான வீரத்தை நிலைப்பித்து வருகிறார்கள். நாளை, உலக விமானப் போக்குவரத்துக் காரியத்தில் இந்தியாவின் பாத்தியங்களை மிகுந்த அக்கரையுடன் பாதுகாக்கும் வேலைக்கு அவர்களே தகுதியுடையவர்களாவார்கள்.

எப்படி மனுப் போடுவதென்பதை எந்த ரிக்ரூடிங் ஆபீசரிடமிருந்தும் தெரிந்துக் கொள்ளலாம்.

AAA 81

# கல்கி பொருளடக்கம்

மலர் 4 இதழ் 50

1945 ஜுலை 22

பார்த்திப ஆடி 7



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

சென்ட்ரல் ஸ்டுடியோஸ்

தயாரிக்க...

# என் மகன்

N கிருஷ்ணமூர்த்தி · U.R. ஜீவரத்னம் ·
D. பாலசுப்பிரமணியம் · பேபி கமலா ·
M.M. ராதாபாய்

ஜூபிடர்

ரிலீஸ்

















மலர் 4 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 50

# என்ன சேதி?

## சதாபிஷேகம்

ஆந்திரத் தாய் பெற்றெடுத்த உத்தமப் புதல்வர்களில் ஒருவரான ஸ்ரீ கொண்டா வெங்கடப்பையா அவர்களுக்கு எண்பது வயது பூர்த்தியாகி எண்பத்தோராம் வயது பிறந்திருக்கிறது. இந்தத் தேசபக்தப் பெருங் கிழவரின் சதாபிஷேக வைபவத்தை முன்னிட்டுச் சென்னை நகர சபையார் அவருக்கு ஒரு வரவேற்பு உபசாரம் நடத்தினார்கள். சென்னை நகரில் இன்னும் பல ஸ்தாபனங்களிலும் அப் பெரியவரை வரவேற்று வாழ்த்தினார்கள். இந்த வாழ்த்துக்களில் நாமும் மனப்பூர்வமான உற்சாகத்துடன் கலந்து கொள்கிறோம். "ஏதோ எண்பது வருஷ காலம் இந்த மண்ணுலகில் வாழ்ந்து விட்டீர்கள். இன்னும் பத்து, இருபது வருஷம் எப்படியாவது பல்லைக் கடித்துக் கொண்டு ஜீவித்திருந்து பாரத நாடு சுதந்திரம் அடைவதையும் பார்த்து விடுங்கள்!" என்பதாகப் பெரியவரை வேண்டிக் கொள்கிறோம்.

## தீர்ப்பில் ஒரு தவறு

மதுரை நகரின் தேசியத் தலைவரும் பரோபகார சீலருமான ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யர் அவர்கள் 1042-ல் 144-வது பிரிவு உத்தரவை மீறிச் சிறைக்குப் போனார். இது காரணமாக இனிமேல் அவர் கோர்ட்டில் வக்கீல் தொழில் செய்யலாமா, கூடாதா என்ற சட்டப் பிரச்னை எழுந்தது. சென்ற வாரத்தில் ஹைகோர்ட் 'புல்' பெஞ்சில் விசாரணை நடைபெற்றது. பிரதம நீதிபதியும் இன்னும் இரண்டு நீதிபதிகளும் சேர்ந்து தீர்ப்புக் கூறியுள்ளார்கள்.


ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யர்

"பிரதிவாதி (ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யர்) உத்தம குணசீலர். சென்ற 28 வருஷ காலமாகக் கௌரவமான முறையில் தொழில் நடத்தி வந்திருக்கிறார். ஆகையால், செய்த குற்றத்திற்கு அவரைக் கண்டிப்பதே போதும். வக்கீல் தொழில் நடத்துவதற்கு அநுமதிக்கலாம்" என்பது தீர்ப்பு.

இந்த நல்ல தீர்ப்பில் ஒரு சிறு தவறு இருப்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறோம். செய்த குற்றத்திற்காகக் கண்டிக்க வேண்டியதுதான். ஆனால் யாரைக் கண்டிக்க வேண்டும்? இத்தகைய உத்தம குணசீலரை—தேசபக்த மாணிக்கத்தை — சிறையிலே வைப்பதற்குக் காரணமாயிருந்த சட்டத்தையும், அதை நிர்வகிக்கும் சர்க்காரையும், அந்த சர்க்காரை நடத்தும் அதிகாரிகளையும் அவசியம் கண்டிக்க வேண்டியது தான். மற்றப்படி ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யர் அவர்களைக் கண்டிப்பதற்கு எவ்வித அவசியமும் இருப்பதாகத் தெரியவில்லை.

## வாழ்த்தும் அநுதாபமும்

சென்னை மாகாணத்தில் பல காரணங்களினால் பரிதாப கதியை அடைந்திருக்கும் ஜஸ்டிஸ் கட்சிக்கு ஸர் ஆர். கே. ஷண்முகம் புத்துயிர் அளித்து நடத்தி அதைச் செல்வாக்குள்ள அரசியல் ஸ்தாபனமாகச் செய்வார் என்று பலர் எதிர்பார்த்தார்கள். அவர்களையெல்லாம் ஏமாற்றி விட்டு ஸர் ஆர். கே. ஷண்முகம் வடக்கே பெரிய உத்தியோகத்துக்குப் போய்விட்டார். 'பெரியது' என்றால், சாதாரண 'பெரி

யது' அல்ல; ரொம்ப ரொம்பப் பெரிய உத்தியோகம். மாதம் பதின்மூன்றாயிரம் ரூபாய் சம்பளம். வட இந்தியாவில் பல சுதேச சமஸ்தானங்களில் தென்னிந்தியர்கள் திவான் பதவி வகிக்கிறார்கள் அல்லவா? அப்படிப்பட்ட சுதேச சமஸ்தானாதிபதிகள் இருக்கிறார்களே, அவர்களுடைய பெரிய மந்திராலோசனை சபைக்கு ஸர் ஆர்.கே. ஷண்முகம் ஆலோசகராக நியமிக்கப் பட்டிருக்கிறார். வட நாட்டு ராஜாக்கள் தென்னிந்தியர் ஒருவரை, அதிலும் தமிழ் நாட்டாரை இத்தகைய பெரும் பதவிக்கு அழைத்திருப்பது குறித்து மகிழ்ச்சி யடைகிறோம். ஸர் ஷண்முகம் அவர்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களையும், ஜஸ்டிஸ் கட்சிக்கு நமது மகத்தான அநுதாபத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

* * *

## வட்ட மேஜை

3, புத்தூர் அக்ரஹாரம்
திருச்சி, 10-7-45

'கல்கி' ஆசிரியர் அவர்கட்கு.

தங்கள் பத்திரிகையை வாரந்தோறும் படித்து வருபவர்களில் நானும் ஒருவன் என்று அறிவித்துக் கொள்கிறேன். முன் ஒரு தடவை விஷ்ணு சித்தர் எனும் பெரியாழ்வாரைத் தங்கள் பத்திரிகையிலும் மலரிலும் பூர்வ சிகை (முன் குடுமி)யை உடையவராகப் போடாமல் பின் குடுமிக்காரராகச் சித்திரம் எழுதியிருந்தது தவறு எனக் கடிதம் போட்டிருந்தேன். அதற்குத் தாங்கள் ஒன்றும் பதில் போடவில்லை.

நிற்க. தற்போது ஸ்ரீ டி. கே. சி. அவர்களால் எழுதப்பட்டுவரும் (8—6—45) கம்ப ராமாயணக் கட்டுரையில் ஒரு தவறு காணப்படுகின்றது. ''விழுமியது சொற்றனை நீ வில்லிது இவன் பேறுன், முழுமுதலவனை வைத்துளது......'' என்னும் பாசுரத்தில் காணப்படும் 'முழுமுதல்வன்' எனும் தொடர் சிவபிரானைக் குறிக்கும் என ஸ்ரீ டி. கே. சி. எழுதியிருத்தல் சற்றும் பொருந்தாது. வைணவ அக்ரேஸரான கம்பநாட்டாழ்வார் 'முழு முதல்வன்' என முக்கட்பிரானைக் குறித்ததாக எங்கும் கண்டிலம். வான்மீகி ராமாயணத்தில் இவ்விடத்தைச் சற்று நோக்குவோம்:

''புருஷோத்தம! இதோ இருக்கும் பொன், மணி இவைகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குவதும் விசுவகர்மாவினால் நிர்மிக்கப்பட்டதும் தெய்வத்தன்மை பொருந்தியதுமான பெரிய வில் விஷ்ணுவினுடையது.''

இதன் வரலாற்றைச் சற்று விளக்குவோமாக:—முன் பரம்பொருள் யாவர் என (நம்மைப்போல்) தேவர்களும் சந்தேகித்தனர். அப்போது விசுவகர்மாவினால் செய்யப்பட்ட இரு தனுசுகள் அரியிடமும் அரனிடமும் கொடுக்கப்பட்டன. தேவர்களால் தூண்டப்பட்ட அரன் விஷ்ணுவைப் பொருத அக்கேசவனின் ஹுங்காரத்தினால் அரன் ஸ்தம்பிக்க அவர் வில்லும் சற்று முறிந்தது. காலக்கிரமத்தில் ஜனகனிடம் வந்த அவ்வில்லையே இராமபிரான் முறித்தனன். வைணவத் தனுசோ வம்ச பரம்பரையாகப் பரசுராமனிடம் வந்து அவரைக் கர்வபங்கம் செய்த ராமனிடம் கொடுக்கப்பட்டுப் பின் வருணனிடமும், அகஸ்தியரிடமும் வந்து சேர்ந்தது. அதே வில்லை மறுபடி அகஸ்தியர் இராமனிடம் சேர்ப்பிக்கும் கட்டமே இதுவாகும். சைவராகிய காளிதாஸ மஹா கவியும் (தன் ரகுவம்சம் 11-வது ஸர்க்கத்தில்) இதை ஒரு சுலோகத்தில் குறிப்பிடுகின்றார். இம்மூன்று ராம கதைகளிலும் காணப்படும் இவ் வரலாற்றையும் உங்கள் டி. கே. சி 'இடைச் செருகல்' எனத் தள்ளி விடுவார் போலும்! இதைத் தாங்கள் 'டி. கே. சி'க்கும் அனுப்பி அவர் என்ன மறுமொழி சொல்கின்றனர் என்பதை எழுதுவீர்கள் என நம்புகின்றேன்.

எஸ். கிருஷ்ணஸ்வாமி பி.ஏ. (ஆனர்ஸ்)

[இந்த விஷயத்தைப் பற்றி 'எங்கள்' டி. கே. சி. யைக் கேட்கவேண்டிய அவசியமே இல்லை. பெரியாழ்வார் முன் குடுமி வைத்திருந்தாலும், பின் குடுமி வைத்திருந்தாலும், குடுமி யில்லாமல் மொட்டையடித்துக் கொண்டிருந்தாலும், எங்களுக்கு ஒன்றுதான். குடுமியின் மாறுதலினால் பெரியாழ்வாரின் தெய்வத் தமிழ்ப் பாசுரங்களின் மகிமை குன்றப் போவதுமில்லை; அதிகமாகப் போவதுமில்லை.

''முழு முதல்வன்'' என்பதற்கு ''மகா விஷ்ணு'' என்று பொருள் கொள்வதே சரி யென்று தங்களுக்குத் தோன்றினால் அப்படியே வைத்துக் கொள்வதில் எனக்கு ஆட்சேபம் இல்லை; டி. கே. சிக்கும் ஆட்சேபம் நிச்சயமாய் இராது. ''பரம்பொருள் யார்? அரியா? அரனா?'' என்ற சந்தேகம் தேவர்களுக்கு ஏற்பட்டிருந்தால், அது அவர்களுடைய துரதிர்ஷ்டம். அரி, அரன் என்பவை ஒரே பரம்பொருளின் இரு பெயர்கள் என்று நாங்கள் கருதுகிறோம். கிறிஸ்துவர்களின் 'பரமண்டலத்துப் பிதா'வும் முஸ்லிம்களின் அல்லாவும் அதே பரம்பொருளைக் குறிப்பதாகவே கருதுகிறோம்.

இராமபிரான் மகாவிஷ்ணுவின் அவதாரம் என்று கருதப்படுவதால், 'முழு முதல்வன்' என்பதற்குச் சிவபிரான் என்று பொருள் கொள்வது காவிய இலட்சணத்துக்குப் பொருத்தமா யிருக்கும் என்று டி. கே. சி. கருதி யிருக்கலாம். 'மகாவிஷ்ணு' என்று தாங்கள் பொருள் கொள்வதில் எவ்வித ஆட்சேபணையும் கிடையாது. —ஆசிரியர்.]

# என்ன ஏமாற்றம்!


"காங்கிரஸின் தேசியப் பிரதிநிதித்வ பாத்தியதையை எவ்வளவோ வற்புறுத்தினேன்;
ஆஸாத்


ஆனால் என்ன பிரயோஜனம்!"


எல்லாருக்கும் வஞ்சனையில்லாமல் தாராளமாகப் புத்திமதி கூறினேன்;
காந்தி


நேரு
"வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாகவே பிரசங்கங்களை பொழிந்தேன்;


ஆனால்....?"


"சிம்லாப் பேச்சுக்களுக்கு ஒரு தடையும் வரக்கூடாது என்பதற்காக வாயை மூடிக்கொண்டிருந்தேன்;
வல்லபாய்


ஆனால்....?"


ஆனால்....?"


தேசாய்
"மகாநாட்டின் மூலகாரணமான நான் சும்மா தடை வேண்டாம் என்று பின்னுக்கு ஒதுங்கிக் கொண்டேன்;


ஆனால்....?"

-உம்மன்


"வேவல் திட்டத்தை ஒரே நொறுக்காய் நொறுக்கினோர்.
ஜின்னா


ஆனால்....?"

"எல்லாப் பொறுப்பையும் என் தலைமீது போட்டுக் கொண்டேன்;
வேவல்


"திட்டத்தை ஒப்புக் கொள்ள நாங்கள் தயாராகத்தான் இருந்தோம்;
சீக்கியர்
வேவல் திட்டம்


ஆனால்....?"


"எனக்கும் ஒரு ஸ்தானம் கிடைக்குமென்று பார்த்தேன்;
பஞ்சாப் பிரதம மந்திரி
ஒரு ஸ்தானம்


ஆனால்....?"


ஆனால்....?"


"என்னென்னமோ எண்ணி, எவ்வளவோ எதிர்பார்த்தேன்;
பொது ஜன இந்தியன்


ஆனால் என்ன எமாற்றம்!

# வேவலின் தோல்வி (?)

சபாஷ்! வேவல் ஸார்!

பலே! தளபதி வைஸ்ராய்!

அப்படிப் போடுங்கள் ஒரு போடு!

என்ன இருந்தாலும், போர் வீரர் என்றால், அவருடைய போக்கே ஒரு தினுசுதான்! அவருடைய பேச்சே ஒரு மாதிரிதான்!

உலகத்தில் எத்தனையோ பேர்தான் தோல்வியடைந்திருக்கிறார்கள்! ஆனால் எங்கள் அன்பார்ந்த வைஸ்ராய் வேவலைப் போல் கொஞ்சம் கூடச் சங்கோசமில்லாமல், கூச்ச நாச்சமில்லாமல், தயக்கம் மயக்கம் இல்லாமல், கௌரவமாக, கம்பீரமாக, பெருமிதத்துடனே தலை நிமிர்ந்து நின்று, "தோல்வி எனதே!" என்று பறைசாற்றியவர்கள் உண்டா?

அதை என்ன ஜோராக, எவ்வளவு தெளிவாக, வற்புறுத்தி, வலியுறுத்தி, தொண்டையின் பூரண பலத்துடனே சொல்லியிருக்கிறார்?

"இந்தத் தோல்வி என்னுடையதுதான். இதனுடைய முழு உரிமையும் பூரண பாத்தியதையும் என்னுடையதுதான்! இந்தத் தோல்வியில் ஒரு அணுவளவையாவது நான் வேறு யாருக்கும் விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை. இந்தத் தோல்வியின் முழு பாரத்தையும் நானேதான் சுமக்கப் போகிறேன். என் தலையிலேதான் சுமக்கப் போகிறேன். குறை கூறுகிறவர்கள் எல்லாரும் என்னைக் கூறுங்கள். புகார் சொல்கிறவர்கள் எல்லாரும் என்னைச் சொல்லுங்கள். திட்டுகிறவர்கள் எல்லாரும் என்னைத் திட்டுங்கள். வெற்றியடைந்திருந்தால் என்னைத்தானே வாழ்த்தியிருப்பீர்கள்? ஆகையால், தோல்விக்காக என்னையே வையுங்கள்; வேறு யாரையும் வைய வேண்டாம்; குறை கூற வேண்டாம்!"

அடாடாடா! இது என்ன பணிவு! இது என்ன அடக்கம்! இது என்ன சாத்விகம்! இது என்ன சத்தியாக்கிரஹம்! வேவல் ஸார்! 'இமாலயத் தவறு'களையெல்லாம் தமது மெலிந்த தோள்களிலே தூக்கிப் போட்டுக் கொண்ட காந்தி மகாத்மா கூட அல்லவா தங்களிடம் அஹிம்சா தர்மத்தில் பாடங் கற்றுக்கொள்ள வேண்டும் போலிருக்கிறது? சிம்லாவில் காந்தியடிகள் வந்து சில நாள் இருந்ததின் பயனா இது? எங்களில் அப்பாவி காங்கிரஸ் தலைவர்கள் சிலர் 'இருதய மாறுதல் வேண்டும்' 'இருதய மாறுதல் வேண்டும்' என்று கேட்டுக் கொண்டிருந்தார்களே? — அந்த 'இருதய மாறுதல்'தான் உண்மையிலேயே ஏற்பட்டு விட்டதா? ஒரு இருதயத்தை எடுத்துவிட்டு இன்னொரு இருதயத்தை வைப்பதற்கு ஏதேனும் ஒரு அதிசய வைத்திய முறையைக் கண்டு பிடித்திருக்கிறார்களா? அந்தச் சிகிச்சையைத் தாங்கள் மேற்கொண்டு விட்டீர்களா? அதன் காரணமாக இராஜ தந்திரியும் இராணுவ தந்திரியுமாகிய தாங்கள், அடியார்க்கு அடியாராயும் தாஸானு தாஸராயும், பக்தமணிகளின் பாததூளியாயும் ஆகி விட்டீர்களா? "எல்லாருடைய தவறுகளையும், குற்றங்களையும், பாவங்களையும், பழிகளையும், தோல்விகளையும் என் தலையிலே நானே சுமக்கிறேன்!" என்று சொல்லும் பரம பாகவதர்களுக்குரிய பக்குவ நிலையை அடைந்து விட்டீர்களா?

அல்லது ......

பிரபுவே! கொஞ்சம் இந்தக் கட்டுரைத் தலைப்பின் முடிவில் உள்ள கேள்விக் குறியைக் கவனியுங்கள்.

உண்மையில், இது தங்களுடைய 'தோல்வி'தானா? அல்லது, அந்தத் தோல்வியில் ஒரு 'வி' உட்கார்ந்திருக்கிறதே:— ஆகையால் இதுவும் ஒரு 'வி' (வெற்றி) வகையைச் சேர்ந்ததா?

இன்னும் தெளிவாகக் கேட்கிறோம்.

ஸிம்லா மகாநாட்டின் முடிவு தாங்கள் பட்டவர்த்தனமாக ஒப்புக்கொண்டிருப்பது போல் உண்மையான உங்களுடைய மகத்தான தோல்வியா, அல்லது பிரிட்டிஷ் இராஜ தந்திரத்தின் இன்னொரு பெரும் வெற்றியா?

வேவல் ஸார்! இப்படி நாம் சொல்வதற்காகத் தாங்கள் மனம் நொந்து கொள்ளக் கூடாது.

தாங்கள் எவ்வளவோ பரிசுத்த நோக்கத்துடன், தூய்மையான உள்ளத்துடன், எல்லாக் காரியங்களையும் செய்திருக்கலாம். ஆயினும், கடைசியில் ஏற்பட்ட முடிவும் அதன் பலாபலன்

களும் மேற்கண்ட விதமான சந்தேகத்தை எங்களுக்கு உண்டாக்கத்தான் செய்கின்றன.

ஸிம்லா மகாநாட்டின் முடிவான பலாபலன்கள் என்ன? — கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

யோசித்துப் பார்க்க அவகாசம் இல்லாவிட்டால், நமது பத்திரிகையில் சென்ற இதழுக்கு முன் இதழில் வந்த "பொல்லாதவர்கள்" என்ற தலையங்கத்தைப் படித்துப் பாருங்கள்.

அதில் என்ன எதிர் பார்த்துச் சொல்லியிருக்கிறதோ, அதே விளைவுகள்தானே இப்போது ஏற்பட்டிருக்கின்றன?

ஸிம்லா மகாநாட்டின் காரணமாக, இந்தியா விஷயத்தில் பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டிருந்த கெட்ட பெயர் அடியோடு போய்விட்டது.

"பிரிட்டிஷார் இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள்; ஆனால் இந்தியத் தலைவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டு பிரிட்டிஷார் கொடுக்கும் சுதந்திரத்தை வாங்கிக் கொள்ள மறுக்கிறார்கள்" என்று ஸ்தாபிதமாகி விட்டது.

அமெரிக்கப் பத்திரிகைகள் அப்படி எழுதுகின்றன.

பிரிட்டிஷ் பத்திரிகைகள் அவ்விதமே எழுதுகின்றன.

தொழிற்கட்சித் தலைவர் ஆட்லி அவ்வாறு சொல்கிறார். "இந்த இந்தியத் தலைவர்கள் எப்போதுதான் ஒற்றுமைப் படுவார்களோ?" என்று மனுஷர் அங்கலாய்க்கிறார்.

அமெரியும் அவ்விதமே அனுதாபப் படுகிறார்.

(சர்ச்சில் வாயைக் கையினால் பொத்திக் கொண்டு மௌனமாகச் சிரித்துக் கொண்டிருக்கிறார் போலும்!)

பெரும்பாலோர், எல்லா இந்தியத் தலைவர்களின் மீதும் பொதுவாக பழியைப் போடுகிறார்கள்.

ஒரு சிலர் குறிப்பிட்டு முஸ்லிம் லீகின் மீதும் ஜனாப் ஜின்னா மீதும் பழியைப் போடுகிறார்கள்.

ஆனால், பிரிட்டிஷார் மீது குற்றம் சொல்கிறவர்கள் (வெளிநாட்டு அரசியல் பிரமுகர்களிலோ பத்திரிகைகளிலோ) ஒருவரும் இல்லை!

ஆகவே, உலகத்தின் முன்னிலையில் பிரிட்டிஷார் இந்தியப் பிரச்னை விஷயத்தில் குற்றமற்றவர்களாகி விட்டார்கள்!

பொல்லாதவர்கள், வேவல் ஸார்! பிரிட்டிஷார் பொல்லாதவர்கள்!

தாங்களும் பொல்லாதவர்தான்! அதாவது பலே கெட்டிக்காரர்!

• • •

ஆதலின், வைஸ்ராய்ப் பிரபுவே, நமது தலைப்பின் கடைசியில் உள்ள கேள்விக் குறிக்கு இடம் இருக்கிறதா, இல்லையா என்று யோசியுங்கள்.

தாங்களும் எத்தனையோ தோல்வியடைந்திருக்கிறீர்கள். உண்மையில், இந்த யுத்தத்தின் ஆரம்ப காலத்தில் தாங்கள் போன இடமெல்லாம் தோல்விதான் என்றும், தாங்கள் ஒரு இடத்தை விட்டுப் போன பிற்பாடுதான் பிரிட்டிஷ் கட்சிக்கு வெற்றி என்றும் ஒரு வதந்தி உலாவிக் கொண்டிருந்தது. இது காரணமாகத்தான் தங்களை யுத்த அரங்கத்திலிருந்து அரசியல் அரங்கத்துக்கு மாற்றியதாகக் கூடச் சொல்லப்பட்டு வந்தது.

சர்ச்சில் செய்த காரியம் இதிலும் வெற்றியடைந்து விட்டதா?

அதாவது போர்க்களத்தில் அடையாத வெற்றியை இராஜதந்திர அரங்கத்தில் தாங்கள் அடைந்து விட்டீர்களா? அந்த வெற்றியைத்தான் எதிர் மறை இலக்கணப்படி 'தோல்வி' என்று சொல்லிக் கொள்கிறீர்களா?

இப்படிப்பட்ட விபரீத சந்தேகம் இந்த தேசத்தில் தோன்றியிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். சந்தேகம் தோன்றுவதற்குப் போதிய காரணம் இருக்கிறது என்பதையும் தெரியப்படுத்திக் கொள்கிறோம்.

ஸிம்லா மகாநாடு தோல்வியடைந்து விட்டதாகத் தாங்கள் சரம சுலோகம் பாடிவிட்டதற்குக் கூறிய காரணம் அம்மாதிரி சந்தேகம் வலுப்படுவதற்கு உதவி செய்கிறது.

ஜனாப் ஜின்னாவின் சமாசாரம் தங்களுக்கு நன்றாய்த் தெரியும்; வெகு நாளாகவே தெரியும். அது தங்களுக்குத் தெரியும் என்பது எங்களுக்கும் நன்றாய்த் தெரியும்.

அப்படியிருக்கும்போது, தாங்கள் என்ன ஆசையுடன் அல்லது நம்பிக்கையுடன் ஸிம்லா மகாநாட்டைக் கூட்டினீர்கள்?

ஸிம்லா மலை உச்சிக்கு வந்ததும் ஜனாப் ஜின்னா தமது பிடிவாதத்தை விட்டு விட்டுப் புது மனிதராக மாறி விடுவார் என்று எதிர்பார்த்தீர்களா?

அப்படி எதிர்பார்த்திருந்தால், தங்களுடைய அறிவு முதிர்ச்சியைப் பற்றியும், மதியின் நுட்பத்தைப் பற்றியும்

எங்களுடைய நம்பிக்கை யெல்லாம் பாழாய்ப் போக வேண்டியதுதான்.

தாங்கள் பச்சைக் குழந்தை யல்ல; மனிதர்களுடைய சுபாவத்தைப் பழகிய பின்பும் தெரிந்து கொள்ளாதவரல்ல.

ஸிம்லா மகாநாட்டைக் கூட்டிய போது இரண்டில் ஒருவிதத்தில் தங்களுடைய திருவுள்ளத்தைத் திடப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும் :—

1. ஜனாப் ஜின்னாவின் பிடிவாதத்துக்கு விட்டுக் கொடுத்துத் தங்களுடைய திட்டத்தை நிறைவேற்றுதல்.

2. ஜனாப் ஜின்னாவைப் புறக்கணித்து விட்டுத் தங்களுடைய திட்டத்தை நிறைவேற்றுதல்.

தங்களுடைய திட்டத்தை அவசியம் வெற்றிகரமாக நிறைவேற்றும் எண்ணம் தங்களுக்கு இருந்திருந்தால், மேற்படி இரண்டு வழிகளில் ஒன்றைக் கடைப்பிடித்திருக்கலாம்.

முதல் வழி என்றால், காங்கிரஸ் தலைவர்களைப் பார்த்துத் தாங்கள் சொல்லியிருக்கலாம் :— "உங்களுடைய கட்சியில் நியாயம் இருக்கிறது. ஆனால் சமரசத்தை முன்னிட்டு, என்னுடைய திட்டத்தின் வெற்றியை முன்னிட்டு, ஜனாப் ஜின்னாவின் கோரிக்கையை ஒப்புக் கொள்கிறேன். முஸ்லிம் ஸ்தானங்கள் ஐந்துக்கும் ஜின்னாவின் நியமனத்தையே ஒப்புக் கொள்கிறேன்" என்று தாங்கள் சொல்லி யிருக்கலாம்.

இது ரொம்ப அநீதி என்று தங்களுக்குப் பட்டிருந்தால், தைரியமாக இரண்டாவது வழியைப் பின் பற்றி யிருக்க வேண்டும்.

ஜனாப் ஜின்னாவின் கோரிக்கை அநீதியானது என்பதைப் பகிரங்கமாகச் சொல்லி அவரை ஒதுக்கி வைத்து விட்டு மற்றவர்களைக் கொண்டு புதிய நிர்வாக சபையை ஏற்படுத்தி யிருக்க வேண்டும்.

தற்சமயம் உள்ள தங்களுடைய நிர்வாக சபையின் அமைப்பு என்ன இலட்சணமானது என்று தெரியாதா? அதற்குப் பொது ஜன ஆதரவு லவலேசமாவது உண்டா?

ஜனாப் ஜின்னாவைத் தவிர்த்து மற்றவர்களைக் கொண்டு நிர்வாக சபையை அமைத்தால் தேசத்தில் மிகப் பெரும் பகுதி ஆதரவு அதற்கு ஏற்பட்டிராதா?

பார்க்கப்போனால், முஸ்லிம்களின் நியமன விஷயத்தில் தாங்கள் காங்கிரஸ் தலைவர்களின் யோசனை ஒப்புக் கொண்டு விடவும் இல்லை.

ஒரு பஞ்சாப் முஸ்லிமின் நியமனத்தை ஜனாப் ஜின்னா ஒப்புக் கொள்ளவில்லை யென்பதற்காக மகாநாட்டைச் சமாப்தி செய்து தங்கள் தோல்வியையும் தெரிவித்து விட்டீர்கள்!

இதை யெல்லாம் பார்க்கும்போது, ஜனாப் ஜின்னாவின் பிடிவாதத்தை ஒரு சாக்காகக் காட்டி ஸிம்லா மகாநாட்டைக் கலைத்து விட்டீர்கள் என்று சந்தேகம் உண்டாவதற்கு இடமிருக்கிறதா, இல்லையா?

இருக்கத்தான் இருக்கிறது. "ஸிம்லா மகாநாடு தோல்வியே யல்ல; பிரிட்டிஷ் இராஜ தந்திரச் சூழ்ச்சியின் மாபெரும் வெற்றி" என்று சொல்வதற்குக்கூட இடம் இருக்கிறது.

ஸிம்லா மகாநாட்டை "வேவலின் தோல்வி" அல்லது "வேவலின் வெற்றி" என்று சொல்வதற்குப் பதிலாக, "வேவலின் மோசடி" என்று சொன்னாலும் தகுதியாயிருக்கும் என்று தோன்றுகிறது.

ஆயினும், நாம் அப்படி யெல்லாம் இப்போதைக்கு முடிவு கட்டிவிடவில்லை.

மேலே தாங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்று சிறிது காத்திருந்து பார்க்கிறோம்.

"கொஞ்சம் பொறுங்கள்; எல்லாத் தடைகளையும் கடந்து விடலாம்" என்று தாங்கள் தங்கள் சரமகவியின் கடைசியில் சொல்லி யிருக்கிறீர்கள்.

"இந்தியா மகோந்நதம் அடையப் போவது நிச்சயம்" என்றும் உறுதி கூறி யிருக்கிறீர்கள்.

அதோடு காங்கிரஸ் அக்கிராசனர் மௌலானா ஆஸாது தங்களுடன் "ஏகோகப் பான்மையைத் தொடர்ந்து கைக்கொள்ளப் போகிறோம்" என்று சொல்லி யிருக்கிறார்.

மகாத்மா காந்தி முற்றிலும் மௌனமா யிருக்கிறார்.

ஜவாஹர்லால்ஜி விடாமல் பேசிக் கொண்டே யிருக்கிறார்.

இதை யெல்லாம் முன்னிட்டு நாங்களும் கொஞ்சம் பொறுத்திருந்து பார்க்கத் தீர்மானித்திருக்கிறோம்.

ஒரு மாதம் பார்க்கிறோம்; இல்லை, மூன்று மாதம் பார்க்கிறோம்.

அதற்குள்ளே இந்தியாவின் அரசியலில் மாறுதல் ஒன்றும் ஏற்படாவிட்டால், ஸிம்லா மகாநாட்டுக்கு "மோசடி மகாநாடு" என்கிற பட்டம் சூட்ட வேண்டியதா யிருக்கு மென்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பாராட்டுகிறோம்!

மௌலானா ஆஸாத் உள்ளிட்ட நமது மாபெரும் காங்கிரஸ் தலைவர்களைப் பாராட்டுகிறோம்.

ஸிம்லா மலையுச்சியை அண்ணாந்து நோக்கி நோக்கி நமக்கெல்லாம் கழுத்து வலி எடுத்து விட்டது என்பதைத் தெரிந்து கொண்டு அங்கிருந்து துரிதமாகவே இறங்கிச் சமவெளிப் பிரதேசத்துக்குப் பத்திரமாக வந்து சேர்ந்ததின் பொருட்டு அவர்களை வாழ்த்துகிறோம்.

போன காரியம் நிறைவேறாமல் வெறுங் கையுடன் திரும்பி வந்ததின் பொருட்டு அவர்கள்மீது நாம் குறைப்படுகிறோ மில்லை.

ஏனெனில், ஸிம்லா மகாநாட்டின் வெற்றி விஷயம் நமக்கு ஆரம்பத்திலிருந்து சந்தேகமாய்த்தானிருந்தது.

அதிலும் மகாத்மா காந்தி ஸிம்லா மகாநாட்டில் ஆஜராகப் போவதில்லை, மௌலானா ஆஸாத் அவர்கள்தான் காங்கிரஸின் சார்பாக ஆஜராவார் என்று தெரிந்ததும், "சரி; தீர்ந்தது! ஜனாப் ஜின்னா இந்த மகாநாட்டை உடைத்தே தீர்வார்!" என்று ஊகிப்பது சாத்தியமாயிருந்தது.

ஆகவேதான், நமது ஜூன் 24உ இதழ்த் தலையங்கத்தின் முடிவில் பின்வருமாறு எழுதியிருந்தோம்:—

"அப்படி ஒரு வேளை ஸிம்லா மகாநாடு தோல்வி யடைவதா யிருக்கும் பட்சத்தில், அதன் குற்றம் காங்கிரஸ் தலைவர்களின் மீது விழக் கூடாது.

ஸிம்லா மகாநாட்டை உடைத்துக் குட்டிச்சுவராக்கின குற்றம் வைஸ்ராய் வேவல் தலையில் சுமரட்டும்; அல்லது ஜனாப் ஜின்னாவின் தலையில் விழட்டும்.

அந்தப் பொறுப்பு காங்கிரஸ் தலைவர்களின் தலையில் சுமர வேண்டாம்.

ஏற்கனவே, கிரிப்ஸ் திட்டம் வந்த போது இது விஷயத்தில் நமது தலைவர்கள் அஜாக்கிரதையா யிருந்து விட்டார்கள். இதனால் தேசம் மிகுந்த கஷ்ட நஷ்டங்களை அடைந்தது. முக்கியமாக, உலக அபிப்பிராயமானது இந்தியாவின் கோரிக்கைக்கு எவ்வளவு ஒத்தாசை செய்யக் கூடுமோ, அவ்வளவு செய்ய முடியவில்லை.

இந்தத் தடவையாவது அது விஷயத்தில் நமது தலைவர்கள் சர்வ ஜாக்கிரதையா யிருக்க வேண்டும்.

ஸிம்லா மகாநாடு முறிந்துபோனால், அதற்குப் பொறுப்பு காங்கிரஸ் தலைவர்கள் அல்ல என்பதைச் சர்வ நிச்சயமாக உலக அபிப்பிராயம் ஒப்புக் கொள்ள வேண்டும்."

மேற்படி வேண்டுகோளை நிறைவேற்றி வைத்ததற்காக நமது மாபெருந் தலைவர்களைப் பாராட்டி நன்றி செலுத்துகிறோம்.

ஸிம்லா மகாநாட்டை உடைத்துக் குட்டிச் சுவராக்கின குற்றம் வேறு யார் தலையில் சுமந்தாலும் சுமராவிட்டாலும், நிச்சயமாகக் காங்கிரஸ் தலைவர்கள் மீது சாரவில்லை.

விட்டுக் கொடுக்கும் விஷயத்திலும் ஒத்துப்போகும் விஷயத்திலும் காங்கிரஸ் தலைவர்களை இம் முறை யாரும் மிஞ்சியிருக்க முடியாது.

நாற்பது கோடி இந்திய மக்களின் பிரதிநிதி ஸ்தாபனமான காங்கிரஸ் மகாசபையின் தலைவர் மௌலானா அபுல்கலாம் ஆஸாத் கேவலம் வைஸ்ராய் வேவலின் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்ட நிர்வாக சபையில் உத்தியோகம் பார்க்கப் பெயர் கொடுத்தார்.

தேச மக்களின் கண்மணியான பண்டித ஜவாஹர்லால் நேரு தமது பெயரையும் கொடுக்கச் சம்மதித்தார்.

(ஸிம்லா மகாநாடு முறிந்து போன பிறகுகூட "நிர்வாக சபைக்கு மிகச் சிறந்த மனிதர்களை அனுப்பி யிருப்போம்" என்று பண்டிதஜீ அங்கலாய்க்கிறார்.)

உத்தியோகத்துக்கும் பதவிக்கும் மாபெரும் சத்துருவாகிய ஸ்ரீ வல்லபாய் படேலும் தமது பெயரைத் தந்தார்.

புரட்சி இயக்கத்தில் ஈடுபட்ட வீராங்கனையான ஸ்ரீமதி ஆஸப் அலியின் தீரமுள்ள புருஷரும் மேற்படி பதவி வகிக்க இணங்கினார்.

இதையெல்லாம் காட்டிலும் நமது தலைவர்கள் செய்யக் கூடியது வேறென்ன இருக்கிறது?

எனவே, ஸிம்லாவிலிருந்து நமது பத்திரிகை நிருபர்கள் தந்திமூலம் அனுப்பிய பன்னிரண்டு லட்சம் வார்த்தைகளும், இரண்டாயிரம் டிரங்கு டெலிபோன் செய்திகளும், இவற்றுக்காகச் செலவான பணமும் விருதாவாய்ப் போனது பற்றி நாம் சிறிதும் வருத்தப்படவில்லை.

உலக அபிப்பிராயம் காங்கிரஸின்மீது குற்றம் சொல்வதற்கு இடமில்லாதபடி காரியத்தை முடித்துக்கொண்டு மலை உச்சியிலிருந்து பத்திரமாகத் திரும்பி வந்ததின் பொருட்டு நமது அரும் பெரும் தலைவர்களை மீண்டும் வாழ்த்துகிறோம்.



# சுத்தியும் அரிவாளும் அத்துடன் கைத்தறியும் நூலும்



ரா. கி

## முதல் பாகம்

## புதுப்பேட்டை மகாநாடு

சில காலத்திற்கு முன்பு தமிழ் நாட்டின் பல ஊர்களில் ஒரு வேடிக்கைக் காட்சியைக் கண்டோம். தெரு வீதிகளில் நின்று இருபுறமும் பார்த்தால், ஒவ்வொரு வீட்டுக் கதவிலும் ஒரு நாமம் போடப்பட்டிருந்தது. வைஷ்ணவர்களல்லாதவர்களின் வீடுகளில் — சுத்த சைவர்களின் வீடுகளில் எல்லாம் — மேற்படி காட்சி காணப்பட்டது. இதற்கு என்ன காரணம் என்பது தெளிவாக யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. நாமம் போட்ட ஊர்களில் எல்லாம் 'திருமழிசை ஆழ்வார்' நாடகமும் நடைபெறவில்லை. "வீட்டின் வெளிக் கதவிலே நாமம் போடாவிட்டால் அத்தகைய வீட்டுக்கு ஏதோ அபாயம் வரப் போகிறதாம்" என்ற ஒரு பீதிகரமான வதந்தி எப்படியோ கிளம்பிப் பரவி யிருந்தது. "நமக்கு என்னத்திற்கு வம்பு? ஒரு வேளை உண்மையா யிருந்தாலும் இருக்கலாம். தொந்தரவை விலைக்கு வாங்கிக் கொள்வானேன்?" என்று ஒவ்வொருவரும் வீட்டு வாசல் கதவில் நாமத்தைப் போட்டு வைத்தார்கள்.

பல வருஷங்களுக்குப் பிறகு சென்ற வாரத்தில் பண்ணுருட்டிக்குப் பக்கத்திலுள்ள புதுப்பேட்டைக்குப் போயிருந்தபோது அந்த மாதிரி — ஆனால் கொஞ்சம் வித்தியாசமான — ஒரு சித்திரக் காட்சி கண்டேன்.

பண்ணுருட்டி என்னும் சிறு பட்டணம் பொம்மைகளுக்குப் பெயர் போனது. (முற்காலத்தில் சர்க்கார் இஷ்டம்போல் வோட்டுப் போடும் சட்டசபை அங்கத்தினரைப் பற்றிச் சொல்லும்போது 'பண்ருட்டி பொம்மைகள்' என்று சொல்லுவது வழக்கம்.) இன்னும், தென்னாற்காடு ஜில்லாவின் சிறந்த தேச ஊழியரான ஸ்ரீ தேவநாயக ஐயாவின் ஊர் என்பதினாலும் பண்ணுருட்டி பிரசித்தி யடைந்திருக்கிறது. அப்பர் ஸ்வாமிகளின் ஜன்மஸ்தலமாகிய திருவதிகை க்ஷேத்திரம் பண்ணுருட்டிக்குப் பக்கத்திலேயிருக்கிற தென்பதும் சரித்திரத்தில் சுவையுள்ளவர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அப்பேர்ப்பட்ட பண்ணுருட்டிக்குப் பக்கத்திலுள்ள புதுப்பேட்டைக்கு, அங்கே நடந்த கைத்தறி நெசவாளர் மகாநாட்டுக்காக நான் போயிருந்தேன். அப்போதுதான் மேலே சொன்ன அதிசயக் காட்சியைப் பார்த்தேன்.

புதுப்பேட்டையில் ஒவ்வொரு வீட்டின் வெளிச் சுவரிலும் ஒரு சித்திரம் வரையப்பட்டிருந்தது. அது என்ன சித்திரம் என்றால், சுத்தியும் அரிவாளும் அமைந்த பொதுவுடைமைக் கட்சியின் சின்னந்தான்.

வீட்டுச் சுவர்களிலும் கதவுகளிலும் மேற்படி சின்னம் காணப்பட்டது. மகாநாட்டுப் பந்தலில் எங்கெங்கும் காணப்பட்டது.

பத்து மைல், இருபது மைல் தூரத்திலிருந்து கும்பல் கும்பலாக மேற்படி மகாநாட்டுக்கு வந்த கைத்தறிகாரர்கள் மேற்படி சின்னம் அடங்கிய செங்கொடிகளைப் பிடித்துக்கொண்டு "புரட்சி ஓங்குக!" என்ற கோஷம் இட்டுக் கொண்டு வந்தார்கள். "செங்கொடி வாழ்க!" என்ற கோஷங்களும் அடிக்கடி எழுந்தன. மேற்படி காட்சிகள் கோஷங்கள் எல்லாம் எனக்கு ஓரளவு வியப்பை அளிக்கத்தான் செய்தன.

கைத்தறித் தொழிலாளருக்கும் சுத்தி — அரிவாளுக்கும் என்ன சம்பந்தம்?

தமிழ் நாட்டுக் கிராமங்களில் வாழும் ஏழை நெசவுத் தொழிலாளிகளுக்கும்,



இவர்கள் எல்லாரும் யார் தெரியுமா? பரம சாதுக்களான கைத்தறி நெசவுத் தொழிலாளிகள். வீடு, வாசல், சொத்து, உடைமை இவற்றில் அசாத்தியப் பற்று உடையவர்கள். ஆயினும், இவர்கள் அதி தீவிர பொது உடைமை வாதிகளாக மாறிக்கொண்டு வருகிறார்கள்! கம்யூனிஸ்ட் தோழர்

பயங்கர காலிப் படைகளை முறியடித்து மகத்தான வெற்றி யடைந்த ருஷிய சோவியத்தின் செங்கொடிக்கும் என்ன சம்பந்தம்?

கைராட்டைச் சின்னமுள்ள இந்திய தேசியக் கொடியைப் பிடித்துக் கொண்டு நமது கைத்தறிகாரர்கள் ஊர்வலம் வந்தால், அது பொருத்தமாகவும் அர்த்த முடைய தாகவும் இருக்கும்.

சுத்தியும் அரிவாளும் உள்ள ருஷியக் கொடியைப் பிடித்துக்கொண்டு இவர்கள் ஏன் வருகிறார்கள்? அந்தக் கொடியை ஏன் இவ்வளவு உரத்த குரலில் வாழ்த்துகிறார்கள்?

இப்படியெல்லாம் நான் அதிசயப்பட்ட போதிலும், அதற்குக் காரணம் கண்டு பிடிப்பது அவ்வளவு பிரயாசையாக இல்லை.

இரண்டு காரணங்கள் பிரத்யட்சமாகவும் தெளிவாகவும் புலப்பட்டன.

அவற்றில் ஒன்று, சூழ் நிலை; இரண்டாவது நூல் நிலை.

("அது என்ன அப்பா அது சூழ் நிலை?" என்று நேயர்கள் பலர் கேட்பது காதில் விழுகிறது.)

'சூழ் நிலை' என்பது சமீபகாலத்தில் தமிழ் வசன நடையில் சிருஷ்டி செய்யப் பட்டிருக்கும் அழகான, அர்த்தபுஷ்டியுள்ள சொற்றொடர். 'சுற்றிலும் சூழ்ந்திருக்கும் சந்தர்ப்பங்களின் நிலைமை' என்று பொருள்.

பரம சாதுக்களான கைத்தறி நெசவு காரர்களைப் 'பயங்கர' கம்யூனிஸ்டுகளாக வும், 'புரட்சி ஓங்குக' என்று கோஷிக்கிற வர்களாகவும் மாற்றுவதற்குக் காரணமா யிருந்து வரும் அப்பேர்ப்பட்ட சூழ் நிலை யாவது என்னவென்று கேட்டால் :—

சென்ற மூன்று வருஷ காலத்தில் சென்னைப் பொது உடைமைக் கட்சிக் காரர்கள் தொழிலாளர்களிடையே செய்திருக்கும் தீவிரப் பிரசாரம்; அவர்களுடைய இடைவிடாத தொண்டு; காங்கிரஸ் தலைவர்களும் தொண்டர்களும் தொழிலாளர்களுடைய கஷ்டங்களை நீக்கும் விஷயத்தில் சிரத்தை எடுத்துக் கொள்ள முடியாமலிருந்தது; ஐரோப்பிய யுத்தத்தில் ருஷியா அடைந்திருக்கும் பெரும் வெற்றி — ஆகிய இவை எல்லாந்தான்.

எனினும், இத்தியாதி சந்தர்ப்பங்களினால் ஏற்பட்ட சூழ்நிலையானது செவிடன் காதில் ஊதிய சங்கைப்போல் ஒரு பிரயோஜனமும் இல்லாமல் போயிருக்கும்; — நூல் நிலை மட்டும் சரியாக இருந்திருக்குமானால்!

கிராமாந்தரங்களிலுள்ள நமது கைத்தறி நெசவுகாரர்கள் பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்து புரட்சிக்காரர்களாக மாறி வருவதற்கு முக்கியமான காரணம்—அடிப்படையான காரணம்—நூல் நிலைதான்!

அதாவது என்ன?

நமது நெசவுத் தொழிலாளரிடம் கைத்தறி இருக்கிறது; அற்புதமான கைத்திறமை இருக்கிறது; துணி விற்பதற்கு வேண்டிய வசதி இருக்கிறது; மார்க்கெட்டில் துணிக்கு நல்ல விலையும் கிடைக்கிறது.

ஆனால், இவ்வளவும் இருந்து என்ன பிரயோஜனம்?

நூல் இல்லை!

கைத்திறமையைப் பயன்படுத்திக் கைத்தறியில் நெய்வதற்கு நூல் இல்லை.

எனவே, கை சோம்பிக் கிடக்கிறது; கைத்தறி சும்மாக் கிடக்கிறது. ஆனால்







களின் ரோமம் சிலிர்க்கும் ஆவேசப் பிரசங்கங்களை ஆவலுடன் கேட்கிறார்கள்! 'புரட்சி ஓங்குக!' என்று கோஷிக்கிறார்கள். ஏன் தெரியுமா? எல்லாம் நூல் பஞ்சத்தினால்தான். அதாவது ஆலையில் உற்பத்தியாகும் நூல் இவர்கள் கைத்தறியில் நெய்வதற்குச் சரிவர வந்து சேராத காரணத்தினாலேதான்!

வயிறு சும்மா இருக்கிறதா? அதுதான் இல்லை; 'பசி', 'பசி' என்று கிண்டுகிறது!

ஒரு பக்கத்தில் கொடுமையான துணிப் பஞ்சம்; ஒன்றுக்கு நாலு விலை கொடுத்துத் துணி வாங்க ஜனங்கள் தயாராயிருக்கிறார்கள்; ஆனால் கடையில் துணி இல்லை.

மற்றொரு பக்கத்தில் வித விதமான ஆடைகள், அற்புதமான ஆடைகள் செய்யும் கைத்திறமையும் கைத்தறிகளும் வேலையின்றிக் காய்கின்றன. பெண்டு பிள்ளைகளின் வயிறுகளும் காய்கின்றன.

ஐயோ! நூல் இல்லையே! வேலையில்லாமல் கை ஊறுகிறதே! நூல் இருந்தால் செய்யலாமே? தினம் இரண்டு, மூன்று ரூபாய் சம்பாதிக்கலாமே? துணி விலை அவ்வளவு கிராக்கியாயிருக்கிறதே!

இந்தக் காலத்தில் தறி ஓட்டி இரண்டு பணம் சம்பாதிக்காவிட்டால் வேறு எந்தக் காலத்தில் சம்பாதிக்கப் போகிறோம்?

நூல்! நூல்! நூல்!

நூல் யார் கொடுப்பார்கள்?

ஐயோ! கடைக்கு வருகிற நூல் எல்லாம் எங்கே போகிறது?

எந்தப் பாவியிடம் போகிறது? எந்தச் சண்டாளன் வருகிற நூலையெல்லாம் அமுக்கி வைத்துக் கொள்கிறான்!

ஏன் எனக்குக் கொடுக்க மாட்டேனென்கிறான்? கொடுக்கிறவன், ஏன் ஒன்றுக்கு மூன்று விலை கேட்கிறான்?

ஒன்றுக்கு மூன்று விலை கொடுத்து இந்தப் பாவியிடம் நூல் வாங்கினால், அப்புறம் நானெல்லாம் பாடுபட்டு வேலை செய்து எனக்கு மிச்சம் என்ன கிடைக்கும்? பாடுபட்டு உழைத்தும் பட்டினிதானே கிடக்க வேண்டும்? பெண்டு பிள்ளைகள் வயிறு காயத்தானே வேண்டும்?

இந்த அநியாயம் உண்டா? கேட்பார் இல்லையா? ஏதோ நூல் கட்டுப்பாடு, விலை கட்டுப்பாடு, ரேஷன் - பங்கீடு என்றெல்லாம் சொல்கிறார்களே? ஜில்லா ஜில்லாவாக சர்க்காரில் நூல் பங்கீடு செய்து அனுப்புவதாகச் சொல்கிறார்களே? அந்த நூலெல்லாம் எங்கே போகிறது? எனக்கு ஏன் கிடைக்கவில்லை? ஏன் அதிக விலை—கொள்ளை விலை—கேட்கிறார்கள்?

இவ்வளவு சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், மேற்பார்வை அதிகாரிகள், அவர்கள், இவர்கள் எல்லாரும் இருக்கிறார்களே? இருந்து என்ன பிரயோஜனம்?

என் வீட்டுக் கொல்லையிலே ஒரு வெண்டைச் செடி வைத்தால் இந்த சர்க்கார் அதிகாரிகள் கணக்கு எழுதி வரி கேட்கிறார்களே?

சரியாகத் தறிக் கணக்கும் நூல் கணக்கும் எழுதிக் கொண்டு எங்களுக்கு நியாயமான விலைக்கு நூல் கிடைக்கச் செய்ய இவர்களுக்குத் துப்பில்லையா?

இல்லையென்றால் எதற்காக உத்தியோகம் பார்க்கிறார்கள்?

கடவுளே! நீயாவது இந்த அநியாயத்தைக் கேட்கக் கூடாதா? நூல் வாங்கிக் கொடுக்கக் கூடாதா?

அப்பா! மகாராஜாக்களே! வாருங்கள்! என்ன சொல்கிறீர்கள்? ருஷியாவில் தொழிலாளிகள் வெற்றியடைந்தார்களா? அங்கே தொழிலாளர் ராஜ்யமா நடந்து வருகிறதா?

ரொம்ப சந்தோஷம்! கத்தியும் அரிவாளும் எழுதிய சிவப்புக் கொடி பிடித்தார்களா அவர்கள்? ‘புரட்சி ஓங்குக!’ என்று கோஷித்தார்களா? நல்லது; நாங்களும் சிவப்புக் கொடி பிடிக்கிறோம். ‘புரட்சி ஓங்குக!’ என்று தொண்டை கொண்ட மட்டும் கத்துகிறோம். தொழிலாளர் ராஜ்யம் வருகிறபோது வரட்டும். இப்போது முதலில் நூல் சம்பாதித்துக் கொடுங்கள்.

என்ன? அவ்வளவு சுலபமாய்க் கிடைக்காதா? தொழிலாளர் சங்கம் அமைக்க வேண்டுமா? அமைக்கிறோம். சந்தா கட்ட வேண்டுமா? கட்டுகிறோம்! மகாநாடு கூட்ட வேண்டுமா? கூட்டுகிறோம்! செங்கொடி பிடிக்க வேண்டுமா? பிடிக்கிறோம். சுத்தியையும் அரிவாளையும் சுற்றி வந்து கும்பிடவேண்டுமா?—கும்பிடுகிறோம்.

எப்படியாவது நெசவுக்கு நூல் கிடைத்தால் போதும். கிடைக்குமோ, இல்லையோ?

**ப**ரம சாதுக்களான கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் பயங்கர பொது உடைமைக் காரர்களாகி வரும் வரலாறு மேற் கண்டதுதான்.



காஞ்சி நகரைச் சேர்ந்த கைத்தறி நெசவுத் தொழிலாளி ஸ்ரீ பார்த்தசாரதி: பேச்சில் புள்ளிக் கணக்குடன் நகைச்சுவையையும் கண்ணீரையும் கலந்து அபாரமாகப் பேசினார்.

புதுப்பேட்டை என்னும் சின்னஞ் சிறு கிராமத்தில் பத்தாயிரம் தறிகாரர்கள் அடங்கிய மகாநாடு, ஒரு பெரிய மாகாண காங்கிரஸ் மகாநாட்டைப் போல் விமரிசையாக நடந்ததற்குக் காரணமும் மேலே கூறியது தான்.

இதையெல்லாம் நான் சொல்லவில்லை. மேற்படி மகாநாட்டில் நெசவுத் தொழிலாளி ஒருவர் — காஞ்சீபுரம் பார்த்தசாரதி என்பவர் — சொன்னதைத் தான் திருப்பிச் சொல்கிறேன்.

“இந்த மகாநாட்டில் இவ்வளவு கூட்டம் கூடியிருப்பதற்குக் காரணம் நூல் கட்டுப்பாடு உத்தியோகஸ்தர்கள் செய்யும் அக்கிரமங்கள் தான்!” என்று மேற்படி தொழிலாளி பார்த்தசாரதி பச்சையாகச் சொன்னார்.

அதிலிருந்து மற்றதையெல்லாம் நான் ஊகிக்கக் கூடியதாயிருந்தது.

## இரண்டாம் பாகம்

## தறிகாரர் துயரம்

**ப**ண்ணுருட்டி — புதுப்பேட்டையில் நடந்த தென்னாற்காடு ஜில்லா நெசவுத் தொழிலாளிகள் மகாநாட்டில் நான் கண்டது கேட்டது, ஊகித்தது, பிறகு சாவகாசமாக விசாரித்துத் தெரிந்து கொண்டது ஆகியவற்றைச் சுருக்கமாகவும் வரிசைக் கிரமமாகவும் இங்கே நேயர்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன்:—

### பீடிகை

கைத்தறி நெசவு நமது இந்திய நாட்டின் மிகப் புராதனமான தொழில்.

ரிக் வேதத்தில் கைத்தறி நெசவின் பெருமையைப் பற்றி அபாரமாய்க் கூறப்பட்டிருக்கிறது. (என்ன கூறப்பட்டிருக்கிறதென்று ஸ்ரீ சிவஞான கிராமணியாரிடம் கேட்கவும். மேற்படி மகாநாட்டில் கிராமணியார்தான் மேற்படி விஷயத்தை எடுத்துக் கூறினார்.)

இங்கிலீஷ்காரர்கள் இந்திய நாட்டுக்கு விஜயம் செய்ததும் முதன் முதலில் செய்த புண்ணிய கைங்கரியம் கைத்தறித் தொழிலை அழித்தது தான்.

சுயராஜ்ய இயக்கத்தின் ஆரம்ப நாட்களில் காங்கிரஸ் தலைவர்கள்-தொண்டர்கள் அனைவரும் தங்களுடைய பிரசங்கங்களில் கைத்தறி நெசவுக்கு நேர்ந்த கதியைப்பற்றிப் பிரலாபிப்பது வழக்கம். அதையே சுயராஜ்யக் கிளர்ச்சிக்கு முக்கிய காரணமாகக் கூறுவதும் உண்டு.

## நூல் முகம்

தற்சமயம் இந்திய நாடெங்கும் பயங்கரமான துணிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது.

பிணங்களுக்குச் சுற்றப்பட்ட துணியைத் திருடி ஏழை மக்கள் தங்கள் மானத்தை மூடிக்கொள்ளும் அளவுக்குக் கொடுமை மிஞ்சி யிருக்கிறது.

தென்னிந்தியாவைப் பொறுத்த வரையில் கைத்தறிகளின் மூலம் துணிப் பஞ்சத்தைச் சமாளிக்கலாம்.

தற்சமயம் தென்னிந்தியாவின் துணித் தேவையில் காலில் ஒரு பங்குதான் கைத்தறியில் உற்பத்தியாகி வருகிறது.

நாட்டில் உள்ள எல்லா கைத்தறிகளுக்கும் எல்லா நெசவுகாரர்களுக்கும் சரிவர வேலை கொடுக்கப்பட்டால் நமக்கு வேண்டிய துணியில் பாதிக்கு மேல் கைத்தறிகளிலேயே உற்பத்தி செய்து கொள்ளலாம்.

இதற்கு மாறாக, கைத்தறிகள் எத்தனையோ இப்போது சும்மாக் கிடக்கின்றன.

கைத்தறி நெசவுகாரர்கள் கையைப் பிசைந்து கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுடைய பெண்டு பிள்ளைகள் வயிற்றைப் பிசைந்து கொண்டிருக்கிறார்கள்.

இந்த நிலைமைக்குக் காரணம் என்ன ?

தறிகாரர்களுக்கு வேண்டிய அளவு நூல் கிடைக்காததுதான்.

நூல் ஏன் கிடைக்கவில்லை ? அதுதான் விசாரிக்கப்பட வேண்டிய முக்கிய விஷயம்.

### நூல்

கைத்தறிகாரர்களுக்கு வேண்டிய நூல் கிடைக்காததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன. ஒன்று, நூல் உற்பத்திக் குறைவு; இரண்டு, நூல் விநியோகத்தில் ஊழல்.

### 1. நூல் உற்பத்திக் குறைவு

தென்னிந்தியாவிலுள்ள நூல் உற்பத்தி ஆலைகள் தங்களால் கூடிய அளவு நூல் உற்பத்தி செய்வதில்லை.

சில நூல் ஆலைகள் வேண்டுமென்றே நூல் உற்பத்தியைக் குறைக்கின்றன.

நூல் உற்பத்தி அதிகமாகி விட்டால் நூல் விலை குறைந்து விடுமே என்று ஆலை முதலாளிகளுக்குப் பயம்.

நூல் ஆலை முதலாளிகள் தற்சமயம் தாங்கள் போட்ட முதலுக்குமேல் இருபது பங்கு, முப்பது பங்கு வருஷத்துக்கு லாபம் அடைகிறார்கள்.

சர்க்காருக்கு ஈ. பி. டி. (அமித லாப வரி) ஏராளமாய்க் கொடுக்கிறார்கள்.

இதைத் தவிரக் கறுப்பு மார்க்கெட்டில் நூல் விற்றுக் கணக்கில்லாத லாபம் சம்பாதிக்கிறார்கள்.

இந்தக் கொள்ளை லாபத்துக்கெல்லாம் ஆபத்து வந்துவிடுமென்று நூல் உற்பத்தியைப் பெருக்க மறுக்கிறார்கள்.

இவர்கள் விஷயத்தில் சர்க்கார் கட்டுப்பாட்டு விதிகள் பயன் படுவதில்லை.

விதிகளை உடைப்பதற்கு என்னவெல்லாமோ யுக்திகள் செய்யப்படுகின்றன.

உதாரணமாக, நல்ல பஞ்சுடன் மட்டப் பஞ்சைக் கலந்து கொடுத்து விடுகிறார்கள். இதனால் நூல் இழைகள் இடையிடையே அறுந்து விடுகின்றன. அறுந்த முனைகளைக் கண்டுபிடித்துச் சேர்ப்பதற்கு நேரமாகிறது. அதுவரை ஆலை ஓடாமல் நிற்கிறது.

இவ்விதம் நூல் உற்பத்தியைத் தடை செய்து குறைவாக்குகிறார்கள்.

நூல் ஆலை ஒவ்வொன்றும் நியாயமாக எவ்வளவு உற்பத்தி செய்யலாமோ அவ்வளவு செய்வதில்லை.

சர்க்கார் திட்டப்படி உற்பத்தி செய்ய வேண்டியதையும் செய்வதில்லை.

### 2. நூல் விநியோக ஊழல்

நூல் விநியோக ஊழல்களில் மூன்று வகை ஊழல்களை நான் அறிந்து கொண்டேன். அவை ரொம்ப அநியாயமாகத்தான் தோன்றுகின்றன. கேளுங்கள் :—

(1) செங்கற்பட்டு ஜில்லாவில் மூன்று தாலூகாக்களில் உள்ள 10,000 கைத்தறி நெசவு காரர்கள் சென்னைப் பட்டணத்துக்கு வந்து இங்குள்ள அதிகாரம் பெற்ற

தென்னூற்காடு ஜில்லாவின் நீடித்த காங்கிரஸ் ஊழியர் ஸ்ரீ தேவநாயக ஐயா; ஜில்லா போர்டு வைஸ் பிரஸிடெண்ட்; கம்யூனிஸ்ட் தோழர்களைக் கண்டு காபரா அடையாமல் அவர்கள் கூட்டிய ஜில்லா நெசவுத் தொழிலாளிகள் மகாநாட்டுக்கு விஜயம் செய்து அங்கே பிரசங்கமும் செய்தார்.

சில நூல் வியாபாரிகளிடம் வாரந்தோறும் நூல் வாங்கிப் போகவேண்டும் என்று ஏற்படுத்தி யிருக்கிறார்களாம்.

இந்த அழகான ஏற்பாட்டின் காரணமாக இதுவரை திருக்கழுக்குன்றத்திலுள்ள நெசவுகாரர்களுக்கு இருபதினாயிரம் ரூபாய் ரயில் செலவும் பஸ் செலவும் ஆகியிருக்கிறதாம்!

ரயில் பஸ் செலவு போனால் போகட்டும். நூல் வாங்க வந்த இடத்தில் தறிகாரர்களுக்குச் சுலபத்தில் நூல் கிடைத்து விடுகிறதா? சுலபமாகக் கிடைப்பது அடியும் குத்தும் உதையுந்தானும்!

நூல் எந்த சமயத்தில் கிடைக்கும், எந்த சமயத்தில் கிடைக்காது என்று தறிகாரர்களுக்கு முன்னால் தெரிவதில்லையாம்.

அதோடு, சென்னை நூல் ரேஷன் அதிகாரியிடம் அவர்கள் தங்களுடைய ரேஷன் சீட்டில் கையெழுத்து வாங்க வேண்டியிருக்கிறதாம்.

இந்தக் காரணங்களினால் தொழிலாளிகள் பணம் செலவழித்துக் கொண்டு சென்னைப் பட்டணத்துக்கு வந்து தெருத் தெருவாய் அலைந்துவிட்டு வெறுங்கையுடன் திரும்பிப் போகிறார்களாம்.

காஞ்சி நெசவுத் தொழிலாளி ஸ்ரீ பார்த்தசாரதி ஒரு ரசமான சம்பவத்தைச் சொன்னார்.

யாரேனும் ஒரு முனிசிபல் கவுன்ஸிலரிடமிருந்து சீட்டு வாங்கிக் கொண்டு வந்தால் நூல் தரப்படும் என்று காஞ்சி தறிகாரர்களுக்கு அறிவிக்கப்பட்டிருந்ததாம். ஒரு முனிசிபல் கவுன்ஸிலரே நூல் வாங்கப் போனாராம். நூல் கடை வாசலில் போய் "நான் முனிசிபல் கவுன்ஸிலர்; நூல் கொடு!" என்றாராம். அவரை இரண்டு காதையும் பிடித்து இழுத்துக் கொண்டு போய்த் தூரத்திலே விட்டுவிட்டு வந்தார்களாம்! *

"முனிசிபல் கவுன்ஸிலரின் கதியே இப்படியானால், முனிசிபல் கவுன்ஸிலரிடமிருந்து சீட்டு வாங்கிக் கொண்டு போனவர்களின் கதி என்ன ஆகியிருக்கும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்!" என்றார் பார்த்தசாரதி.

இந்தச் சம்பவத்தைக் கேட்டுச் சபையோர் சிரிக்கத்தான் சிரித்தார்கள். ஆயினும் அவர்களுடைய உள்ளமானது அப்போது இரத்தக் கண்ணீர் வடித்தது!

(2) இரண்டாவது ஊழல், சில பேராசை பிடித்த தனி நபர்களிடம் நூல் விநியோக உரிமையை ஒப்படைத்திருப்பது.

தென்னாற்காடு ஜில்லாவில் மொத்தம் 20,000 தறிகாரர்கள் இருக்கிறார்கள்.

இவர்களுக்கு நூல் விநியோகம் செய்யும் உரிமை 190 'மாஸ்டர் வீவர்'களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது.

'மாஸ்டர் வீவர்'கள் என்றால், சொந்தத்தில் ஐந்து தறி, பத்து தறி, இருபது தறி வைத்துக்கொண்டு அவற்றை வாடகைக்கு விட்டுப் பணம் சம்பாதிக்கும் குட்டி முதலாளிகள்.

ஏற்கெனவே, தறி வாடகை விஷயத்தில் தொழிலாளர்களை மேற்படி குட்டி முதலாளிகள் இம்சித்து வருகிறார்கள்.

நூல் விநியோக உரிமையையும் அவர்களுக்குக் கொடுத்து விட்டால் கேட்க வேண்டுமா?

நரிக்கு அதிகாரம் கொடுத்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்காமல் வேறு என்ன தான் செய்யும்?

மேற்படி 190 'மாஸ்டர் வீவர்'களுக்கு நூல் விற்கும் நூல் வியாபாரிகள் வேறு இருக்கிறார்கள்.

ஆகக் கூடி, ஆலையிலிருந்து நூல் சென்னையிலுள்ள பெரிய வியாபாரிக்கு வந்து, அவரிடமிருந்து கடலூரிலுள்ள சின்ன வியாபாரிக்கு வந்து, அவரிடமிருந்து மாஸ்டர் வீவருக்கு வந்து, அவரிடமிருந்து தொழிலாளியின் கைக்குப் போய்ச் சேர்வதற்குள் நூலின் விலை கணக்கு வழக்கில்லாமல் ஏறி விடுகிறது.

இடையில் கறுப்பு மார்க்கெட் விற்பனை எத்தனையோ!

சமீபத்தில் நான் மாயவரத்துக்குப் போயிருந்தேன். கூறைநாடு நெசவுத் தொழிலுக்குப் பெயர்போன இடமாயிற்றே, அங்கே எப்படி யிருக்கிறது நூல் நிலைமை என்று விசாரித்தேன். பின்வரும் விவரங்கள் தெரிந்தன :—

கூறை நாட்டில் இப்போது சுமார் 750 நெசவுத் தொழிலாளிகள் இருக்கிறார்கள்.

---

* இந்தச் சம்பவத்தை நூல் வாங்குவது சம்பந்தமாக ஸ்ரீ பார்த்தசாரதி சொன்னாரா, நூல் ரேஷன் கார்டில் அதிகாரியின் கையெழுத்து வாங்குவது சம்பந்தமாகச் சொன்னாரா என்பது நன்றாக நினைவில்லை. எப்படி யிருந்தாலும், விஷயம் ஒன்றுதான்.

இவர்களுக்கு நூல் விற்கும் உரிமை சுமார் எட்டு வியாபாரிகளிடம் சிக்கிக் கொண்டிருக்கிறது.

இவர்கள் தங்களுக்கு இஷ்டமான சிலருக்கு மட்டும் நூல் கொடுக்கிறார்கள்.

மற்றப்படி நூற்றுக்கணக்கான நெசவுத் தொழிலாளர்கள் நூலின்றி, வேலையின்றி, உண்ண உணவின்றித் தவிக்கிறார்கள்.

கூரை நாட்டில் சில நெசவுத் தொழிலாளிகள் தங்கள் வீட்டுக் கூரைகளைப் பிரித்து விற்றுச் சாப்பிடும்படியான நிலைமைக்கு வந்திருக்கிறார்கள்!

தறிகாரர் சங்கம் ஏற்படுத்தி நெசவுக்கு நூல் கிடைக்கும்படி செய்ய டெக்ஸ்டைல் கண்ட்ரோல் ஆபீஸருக்குத் தீர்மானத்துக்கு மேல் தீர்மானமும் மகஜருக்கு மேல் மகஜரும் அனுப்பியும் இதுவரையில் பயன்படவில்லை.

(3) மேற்படி கடைசி வாக்கியத்தில், டெக்ஸ்டைல் கண்ட்ரோல் ஆபீஸரைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறதல்லவா?

நூல் - துணி விநியோகத்தையும், மற்றும் நூல் - துணி கட்டுப்பாட்டு விதிகளையும் அமுல் நடத்துவதற்கென்று ஒவ்வொரு ஜில்லாவிலும் டெக்ஸ்டைல் கண்ட்ரோல் ஆபீஸரும், அவருக்குக் கீழே இன்னும் சில அதிகாரிகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்த அதிகாரிகள் மேற்படி விதிகளை அமுல் நடத்தும் விதத்திலேதான் மூன்றாவது ஊழல் ஏற்படுகிறது.

இவர்கள் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்; கட்டுப்பாடு விதிகளைக் கண்டிப்பாக அமுல் நடத்த அதிகாரம் பெற்றவர்கள். ஆனாலும் விதிகள் சரியாக அனுஷ்டிக்கப்படுகின்றனவா? — இல்லை.

தறிகாரர்கள் ஒவ்வொருவருக்கும் நூல் கிடைக்கும்படி இவர்கள் பார்த்துக் கொள்கிறார்களா? — இல்லை.

கள்ளமார்க்கெட் வியாபாரம் நடக்காமல் நிறுத்தி விட்டார்களா? — இல்லை.

"ஏன்? ஏன்? ஏன்?" என்று ஏழை நெசவுத் தொழிலாளர்கள் கேட்கிறார்கள். அழுது கொண்டு கேட்கிறார்கள்; கண்ணீர் விட்டுக் கொண்டு கேட்கிறார்கள்.

"ஏழை அழுத கண்ணீர் கூரிய வாள் ஒக்கும்" என்பார்கள்.

இது உண்மை யென்றால், நூல் பஞ்சத்தினால் வேலையின்றியும் உணவின்றியும் தவிக்கும் நெசவுத் தொழிலாளர் இதுவரை சிந்தியிருக்கும் கண்ணீர் இந்த அட்வைஸரி கவர்ன்மெண்டைத் தீர்த்துக் கட்டியிருக்க வேண்டும்.

ஆனாலும் அட்வைஸரி கவர்ன்மெண்ட் இன்னும் நியமமாய் நடந்து கொண்டுதானிருக்கிறது.

எனவே, மேற்படி பழமொழியின் உண்மையிலேதான் நாம் அவநம்பிக்கை கொள்ள வேண்டியிருக்கிறது.

• • •

ஆலை முதலாளிகளை எதிர்த்து அவர்களுடைய சூழ்ச்சிகளை வென்று நூல் உற்பத்தியை அதிகமாக்குவது ஒருவேளை இந்த கவர்ன்மெண்டாருக்கு முடியாத காரியமாயிருக்கலாம்

பொதுஜன அரசாங்கம்—சுயராஜ்ய அரசாங்கம்—வந்தால்தான் அதை நன்றாய்ச் செய்ய முடியும்.

ஆனால், நூல் விநியோகத்திலுள்ள மேற்கூறிய ஊழல்களை இப்போதுள்ள அரசாங்கத்தினால் போக்க முடியாதா?

நிச்சயமாக முடியும்.

ஆலையில் உற்பத்தியாகும் நூல், இடையில் உள்ள தரகர்களிடம் படிப்படியாகச் சிக்கிக்கொள்ளாமல், நேரே கைத்தறி நெசவுகாரர்களிடம் போய்ச் சேரும்படி செய்வதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன.

சர்க்காரே நூலை வாங்கி கிராமாதிகாரிகள் மூலமாக விநியோகிக்கலாம்.

கூட்டுறவுச் சங்கங்களின் மூலமாக விநியோகிக்கப் பண்ணலாம்.

கைத்தறிகாரர்களின் சங்கங்களின் மூலமாகவே விநியோகிக்கலாம்.

வியாபாரிகளின் மூலமாகவே விநியோகித்தாலும் இன்னும் சரியான சட்ட திட்டங்களைச் செய்து தறிகாரர்களுக்கு நியாயமான விலைக்கு நூல் கிடைக்கும்படி செய்யலாம்.

கள்ள மார்க்கெட் நூல் விற்பனையையும் கண்டிப்பாய்த் தடுக்கலாம்.

இதெல்லாம் நடக்க வேண்டுமெனில், அதிகாரிகள் தறிகாரர்களின் புகார்களையும் முறையீடுகளையும் செவி கொடுத்துக் கேட்டு நியாயம் செய்ய வேண்டும்.

ஆனால் இப்போது நடப்பதென்ன?

தென்னாற்காடு ஜில்லா நூல் வியாபாரி ஒருவர் வடாற்காடு ஜில்லாவுக்குக் கள்ள மார்க்கெட்டில் விற்க நூல் அனுப்பினார்.

மேற்படி திருட்டுத்தனத்தைக் கையுங் களவுமாக அந்த ஊர்த் தறிகாரர் சங்கத்தார் கண்டு பிடித்தார்கள்.

கண்டு பிடித்து விட்டு டெக்ஸ்டைல் கண்ட்ரோல் ஆபீஸருக்கு எழுதினார்கள்.

அந்த அதிகாரி மேற்படி புகார் கடிதத்தின் மேல் என்ன எழுதினார் தெரியுமா?

"இந்தத் தறிகாரர் சங்கத்தினர் சுத்த அதிகப்பிரசங்கிகள். தாங்களே சர்வாதிகாரிகள் என்று நினைத்துக் கொண்டார்கள் போலும். கள்ள மார்க்கெட் நூலைப் பிடிப்பதற்கு இவர்கள் யார்? இந்தச் சங்கத்தை உடனே கலைத்துவிட வேண்டும். நம்முடைய அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டுச் சொன்னபடி வேலை செய்யும் வேறு சங்கம் ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் இந்த ஊர்த் தறிகாரர்களின் புகார் கவனிக்கப்படும்."

புகார் கடிதத்தையும் அதன்மீது மேற்கண்டவாறு எழுதியிருந்த அதிகாரியின் உத்தரவையும் புதுப்பேட்டை மகாநாட்டில் தோழர் ராமமூர்த்தி பகிரங்கமாக வாசித்துக் காட்டினார். இப்படிப்பட்ட அதிகாரிகள் இருக்கும் வரையில் கள்ள மார்க்கெட் எப்படி ஒழியும், தறிகாரர்களின் துயரம் எப்படித் தீரும் என்று அவர் கேட்டார்.

## முடிவுரை

இடையிடையாக, ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டு விட்டு இந்தச் சோகக் கதையை முடிக்க விரும்புகிறேன்.

சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எல்லாரும் திறமை யற்றவர்கள், சோம்பேறிகள், லஞ்சம் வாங்குகிறவர்கள் என்றெல்லாம் சொல்லும் கட்சியை நான் சேர்ந்தவனல்ல.

மிகத் திறமை கொண்டவர்களும், நாணய முள்ளவர்களும், உத்தமர்களுமான எத்தனையோ உத்தியோகஸ்தர்களை என் சொந்த அநுபவத்தில் அறிந்திருக்கிறேன்.

சென்னை மாகாணத்தின் டெக்ஸ்டைல் கமிஷனர் ஸ்ரீ எஸ். வெங்கடேசவரன் ஐ. ஸி. எஸ். அப்படிப்பட்ட சிறந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்களில் ஒருவர்.

நாளைக்குச் சுயராஜ்ய சர்க்கார் வந்தால் ஸ்ரீ வெங்கடேசவரன் போன்ற உத்தியோகஸ்தர்கள் தான் நமது மந்திரிகளுடன் ஒத்துழைத்துத் திறமையாக ஆட்சியை நடத்தி வைக்க உதவி செய்யப் போகிறவர்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால், இந்தத் துணி — நூல் கட்டுப்பாடு விஷயம் இருக்கிறதே, இது ஒரு பிரம்மாண்டமான விஷயம்.

எவ்வளவு திறமைசாலியா யிருந்தாலும் ஒரு தனி மனிதரால் கவனித்துத் தக்கது செய்ய முடியாத விஷயம்.

முக்கியமாக, கைத்தறிகாரர்களுக்கு நூல் விநியோகம் செய்வதைக் கவனிப்பதற்கு மட்டுமே ஒரு திறமையான மனிதர் தேவை.

ஸ்ரீ வெங்கடேசவரனுடைய உதவிக்கு ஒரு நல்ல அதிகாரியை நியமித்தாலொழிய இது சாத்தியப்படாது.

அந்த உதவி அதிகாரி ஏற்கெனவே கிராமங்களில் சமூக ஊழியம் செய்து பழக்கப் பட்டவரா யிருந்தால் ரொம்ப நல்லது.

* * *

புதுப்பட்டி மகாநாட்டில் தோழர் இராமமூர்த்தியின் ஒரு மணி நேரப் பேச்சைக் கேட்டுவிட்டு ஸ்ரீ சிவஞான கிராமணியார் மூக்கின்மேல் விரலை வைத்தார். "பத்து வருஷம் நெசவுத் தொழில் செய்த என்னால் கூட இப்படி விஷயங்களை எடுத்துச் சொல்லி யிருக்க முடியாது. பரம்பரையாக நெசவுத் தொழில் செய்தவரைப்போல் பேசினார்!" என்று சொல்லி அதிசயித்தார்.

ஸ்ரீ ராமமூர்த்தி, ஸ்ரீ பாலசந்திர மேனன் முதலிய கம்யூனிஸ்ட் தோழர்கள் கைத்தறித் தொழிலாளர் விஷயத்தை அவ்வளவு நன்றாக ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள்.

தென்னாற்காடு ஜில்லா தறிகாரர் சங்கத்தின் அக்கிராசனர் நடராஜன், காரியதரிசி நடராஜன் முதலியவர்கள் தொழிலாளர்களிடையே பிறந்து வளர்ந்து தொழிலாளர்களின் கஷ்ட நஷ்டங்களை யெல்லாம் நன்றாய்த் தெரிந்து கொண்டிருப்பவர்கள். தொழிலாளருக்குத் தொண்டு செய்வதற்கென்றே இவர்கள் பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்திருக்கிறார்கள் என்று தோன்றியது.

எனவே, 'கம்யூனிஸ்ட்' ஆயிற்றே என்று பயப்படாமல் மேற்படி ஊழியர்களுடைய யோசனைகளைக் கேட்டு, அவர்களுடைய ஒத்துழைப்பையும் பெற்றால், நூல் விநியோக ஊழல்களைத் தீர்ப்பது சுலபமா யிருக்கும்.

ஏழைக் கைத்தறிகாரர்களின் துயரம் தீரும்; அவர்களுடைய பெண்டு பிள்ளைகளின் கண்ணீர் தீரும்; சென்னை மாகாணத்தின் துணிப் பஞ்சமும் குறையும்.

# சிவகாமியின் சபதம்



கல்கி

## அத்தியாயம் 35

## கலங்கிய குளம்

ஆஹா! அந்தப் பழைய தாமரைத் தடாகம்தானா இது?

சிவகாமியும் தானும் எத்தனையோ இன்ப தினங்களைக் கழித்த குளக்கரை தானா இது?

ஆம்; அதுதான். ஆனால் அதன் தோற்றம் இப்போது அடியோடு மாறிப் போயிருந்தது.

மாமல்லரின் மனம் அடைந்திருந்த நிலையை அந்தத் தாமரைக் குளம் நன்கு பிரதிபலித்தது.

பளிங்குபோல் தெளிந்த தண்ணீர் ததும்பிக் கொண்டிருந்த தடாகத்தில் இப்போது பெரும்பாலும் சேறும் ஒரு மூலையில் கொஞ்சம் கலங்கிய நீரும் காணப்பட்டது.

காண்போர் கண்களையும் உள்ளத்தையும் ஒருங்கே கவர்ந்து பரவசப்படுத்திய செந் தாமரை மலர்கள், குவிந்த மொட்டுக்கள், பச்சை வர்ணக் குடைகள் போல் கவிந்து படர்ந்திருந்த இலைகள் — இவை ஒன்றும் இப்போது இல்லை. குளத்தில் யானைகளின் கால்களால் சேற்றோடு சேர்த்து மிதிக்கப்பட்ட சில தாமரை இலைகள் காணப்பட்டன. குளக்கரையில் வாடி வதங்கிய இலைகளையுடைய தாமரைக் கொடிகள் துவண்டும் உலர்ந்தும் கிடந்தன.

குளக்கரையில் தழைத்துச் செழித்திருந்த விருட்சங்கள் கிளைகள் முறிக்கப்பட்டுப் பாதி மொட்டையாகக் காணப்பட்டன.

ஆ! அந்த விசு பலகை! அதுவும் பாதியில் முறிந்து ஒரு பாதி தரையில் துண்டு துண்டாகக் கிடந்தது. இன்னொரு பாதி அப்படியே பிளந்த முனைகளுடன் நின்றது.

உடைந்த இருதயத்துடன் கூடிய மாமல்லர் அந்தப் பிளந்த விசு பலகையின் மேல் உட்கார்ந்தார். சுற்று முற்றும் பார்த்தார்.

பழைய ஞாபகங்கள் ஒன்றையொன்று தள்ளிக் கொண்டு போட்டியிட்டுக் கொண்டு வந்தன.

வஸந்த காலத்தில், வனத்திலுள்ள மரங்களெல்லாம் புதுத் தளிர்களும் புஷ்பங்களுமாய்க் குலுங்கிக் கொண்டிருந்த நாட்களில், எத்தனையோ தடவை சிவகாமியைத் தேடிக்கொண்டு அவர் அங்கு வந்ததுண்டு. கானகத்துப் பட்சிகள் எல்லாம் கலகலவென்று சப்தித்துக் கொண்டிருந்த நேரங்களில், அவரும் சிவகாமியும் அதே விசு பலகையில் உட்கார்ந்து, கண்களோடு கண்களும் கரங்களோடு கரங்களும் இதயத்தோடு இதயமும் பேசவிட்டு, வாய் மூடி மௌனிகளாய் நேரம் போவது தெரியாமல் எத்தனையோ நாள் கழித்ததுண்டு.

அஸ்தமன நேரத்தில் கீழ்வான முகட்டில் பச்சை மரங்களுக்கிடையே பொற் குடத்தைப் போல் பூரண சந்திரன் உதயமாகும்போது, அந்த முழு மதியையும் சிவகாமியின் முகத்தையும் அவர் எத்தனையோ தடவை ஒப்பிட்டுப் பார்த்ததுண்டு.

தாமரைக் குளத்திலே ததும்பிய தெளிந்த நீரின் விளிம்பிலே நின்று, மேலே தோன்றிய சிவகாமியின் உண்மை உருவத்தையும் தண்ணீரிலே தெரிந்த அவளுடைய பிரதிபிம்பத்தை

அத்தையுடன் பேசுவதாயிருந்தால் ஆயனர் உரத்த குரலில் அல்லவா பேசுவார்? வேறு யாருடன் பேசிக் கொண்டிருக்கிறார்?

உள்ளே, சிற்பமண்டபத்தில் ஆயனருக்கு அருகில் உட்கார்ந்திருந்த மனிதரைப் பார்த்ததும் மாமல்லருடைய வியப்பு பன்மடங்கு ஆயிற்று.

அப்படி உட்கார்ந்திருந்தவர் வேறு யாருமில்லை; ஒற்றர் தலைவன் சத்ருக்னன்தான்!

சத்ருக்னனை அங்கே கண்டதுகூட மாமல்லருக்கு அவ்வளவு வியப்பளிக்கவில்லை.

சத்ருக்னனுடைய முகத்தைப் பார்த்ததும் பளிச்சென்று இன்னொரு முகம் ஞாபகம் வந்ததினாலேதான் அவ்வளவு வியப்பு ஏற்பட்டது.

அப்படி ஞாபகத்துக்கு வந்த முகம் சற்று முன்னால் காட்டுப் பாதையில் அவர் பார்த்த பெண்ணின் முகமேதான்.

ஆ! என்ன அதிசயமான ஒற்றுமை? ஒருவேளை சத்ருக்னனுடைய தங்கை, தமக்கையா அவள்? அல்லது ஒருவேளை இவனேதான் ......?

சந்தேகம் தோன்றி ஒரு கணத்திற்குள்ளேயே அது தீர்ந்துவிட்டது.

ஏனெனில், சத்ருக்னனுக்கு அருகில் ஒரு சேலையும், மற்றும் ஸ்திரீகளுக்குரிய சில ஆபரணங்களும் கிடந்ததை மாமல்லர் பார்த்தார்.

## அத்தியாயம் 36

## சத்ருக்னன் வரலாறு

வாசற்படியில் மாமல்லர் வந்து நின்றதைச் சத்ருக்னனும் ஆயனரும் கவனிக்கவில்லை. அவ்வளவாகத் தங்களுடைய பேச்சில் அவர்கள் ஆழ்ந்திருந்தார்கள்.

மண்டபத்துக்குள்ளே அவர் பிரவேசித்ததும் இருவரும் ஏககாலத்தில் நிமிர்ந்து பார்த்தார்கள்.

சத்ருக்னன் சட்டென்று எழுந்து நின்று, "பிரபு!......" என்றான். மேலே ஒன்றும் சொல்ல முடியாமல் திகைத்தான்.

ஆயனரோ முகத்தில் உற்சாகமும் குதூகலமும் ததும்ப, சாய்ந்து படுத்திருந்தவர் நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்து, "பிரபு! வாருங்கள்! வாருங்கள்! தங்களைத்தான் இப்போது நினைத்துக் கொண்டிருந்தேன். சத்ருக்னன் நல்ல செய்தி கொண்டு வந்திருக்கிறான். குழந்தை சிவகாமி உயிரோடிருக்கிறாளாம்; சௌக்கியமாயிருக்கிறாளாம்!" என்று கூறினார்.

இதைக் கேட்ட மாமல்லரின் தலை சுழல்வது போலிருந்தது.

ஆயனருக்கு அருகில் வந்து நின்று சத்ருக்னனை ஏறிட்டுப் பார்த்த வண்ணம், "சத்ருக்னா? இது உண்மைதானா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு, உண்மைதான்!" என்று சத்ருக்னன் கூறி விட்டு, கைகூப்பிய வண்ணம், "பல்லவ குமாரா! சற்று முன்பு காட்டுப் பாதையில் தங்களைக் கண்டபோது பேசாமல் வந்து விட்டேன். அதற்காக மன்னிக்க வேண்டும். திடீரென்று தங்களைப் பாதையில் சந்தித்ததும் பேசக் கூச்சமாயிருந்தது!" என்று பணிந்த குரலில் கூறினான்.

"ஆ! அந்தப் பெண் நீதானா? நல்ல வேஷம்!" என்றார் மாமல்லர்.

"ஆமாம்; நானுங்கூடத்தான் சற்று முன்பு திகைத்துப் போய் விட்டேன். பெண்பிள்ளை வேஷம் எவ்வளவு நன்றாய் இவனுக்குப் பலித்திருந்தது? ஆ! சக்கரவர்த்தி ஒவ்வொரு வேலைக்கும் எவ்வளவு பொருத்தமாய் ஆள்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்?" என்றார் ஆயனர்.

மாமல்லர் மெல்லிய குரலில் தமக்குத் தாமே, "சக்கரவர்த்தியின் சாமர்த்தியத்தை நீங்கள் தான் மெச்சிக்கொள்ள வேண்டும்!" என்று முணுமுணுத்துக் கொண்டார். பிறகு, சத்ருக்னனைப் பார்த்து, "எதற்காக ஸ்திரீ வேஷம் போட்டாய்?" என்று கேட்டார்.

"சத்ருக்னன் அந்த வேஷம் போட்டதினால்தான் சிவகாமியைப் பற்றித் தெரிந்துகொள்ள முடிந்தது. தயவு செய்து உட்காருங்கள். சத்ருக்னன்

எல்லாம் விவரமாய்ச் சொல்லட்டும். நானும் இன்னொரு தடவை கேட்டுக் கொள்கிறேன்" என்றார் ஆயனர்.

அவ்விதமே மாமல்லர் உட்கார்ந்தார். சத்ருக்னனும் உட்கார்ந்து தன் வரலாற்றைக் கூறத் தொடங்கினான். அந்த வரலாறு இதுதான் :—

"ஆயனரும் சிவகாமியும் காஞ்சிக் கோட்டையிலிருந்து சுரங்க வழியாக வெளியே போய்விட்டார்கள் என்று தெரிந்ததும் சக்கரவர்த்திக்கு இடி விழுந்தது போலாகி விட்டது. உடனே தாமும் கோட்டைக்கு வெளியே போகத் தீர்மானித்துப் படைகளை ஆயத்தம் செய்யும்படி கட்டளையிட்டார். பிறகு என்னைத் தனியாகக் கூப்பிட்டு, 'சத்ருக்னா! நீ இதுவரையில் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எத்தனையோ சேவைகள் செய்திருக்கிறாய். ஆனால் அவை எல்லாவற்றையும் காட்டிலும் முக்கியமான சேவை இப்போது செய்ய வேண்டும். மாமல்லர் மட்டும் இப்போது இங்கிருந்தால் நானே அந்த வேலையை மேற்கொள்வேன். பல்லவ குலத்தின் மானத்தைக் காப்பதற்காக நான் இப்போது போருக்குக் கிளம்ப வேண்டியிருக்கிறது. சிவகாமியைக் கண்டுபிடித்து அவளைத் திருப்பிக் கொண்டு வரும் வேலையை உன்னிடம் ஒப்படைக்கிறேன். நீதான் அந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும். சிவகாமியை மீட்டுக் கொண்டுவர முடியாவிட்டால் அவளைப் பத்திரமாகப் பாதுகாக்கவாவது வேண்டும்' என்று



கட்டளை யிட்டார். இதைக் கேட்டு நான் திகைத்துப் போனேன். 'பிரபு! இதை நான் எப்படிச் செய்வேன்? சிவகாமி அம்மைக்கு ஒன்றும் நேர்ந்திராவிட்டால், தந்தை ஆயனருடன் அவர் இருந்தால், ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி இருவரையும் அழைத்துக் கொண்டு வருவேன். சளுக்கரிடம் சிறைப்பட்டிருந்தால் தன்னந் தனியாக நான் என்ன செய்வேன்?' என்றேன். 'கஷ்டமான காரியமானபடியால்தான் உன்னிடம் ஒப்படைக்கிறேன். சத்ருக்னா! நீ இதுவரை எத்தனையோ வேஷங்கள் போட்டிருக்கிறாய். அவை எல்லாவற்றையும்விட உனக்கு நன்றாய்ப் பலிக்கக்கூடிய வேஷம் ஒன்று இருக்கிறது. அது பெண் வேஷந்தான்!' என்றார். சக்கரவர்த்தியின் கருத்தை நான் உடனே தெரிந்து கொண்டேன். சற்று முன் பார்த்தீர்களே, அம்மாதிரி வேஷம் தரித்துக் கொண்டு காஞ்சியை விட்டுக் கிளம்பினேன். நேரே இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

நான் வரும் சமயத்திலேதான் இவரை ஸ்மரணையற்ற நிலையில் இந்த வீட்டுக்குள்ளே கொண்டு வந்தார்கள். பின்னோடு சிவகாமி தேவி வரவில்லை. எனவே, தேவி சளுக்கரிடம் சிறைப்பட்டுத்தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு இங்கிருந்து கிளம்பினேன். காஞ்சிக் கோட்டையைச் சுற்றிச் சென்றேன். சளுக்க ராட்சதர்களின் கூக்குரல் கேட்ட இடங்களிலெல்லாம் மறைந்திருந்து கவனித்தேன். கடைசியில் காஞ்சிக்கு வடமேற்கே ஒரு பெரிய சளுக்கர் படை வட திசையை நோக்கிப் புறப்பட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அந்தப் பெருங் கும்பலுக்கு மத்தியிலிருந்து ஸ்திரீகள் புலம்பி அழும் சத்தம் வந்துகொண்டிருந்தது. இன்னும் அருகில் சென்று பார்த்தபோது, அவ்வாறு ஓலமிட்ட ஸ்திரீகள் நமது கிராமங்களில் சிறை பிடிக்கப்பட்டவர்கள்தான் என்று தெரிந்தது. அந்தப் பெண்களுக்கு நடுவே பல்லக்கு ஒன்றும் காணப்பட்டது. அதில் இருந்தவர் சிவகாமி தேவிதான் என்று தெரிந்து கொண்டேன்.

சற்று நேரத்துக்கெல்லாம் நான் தலைவிரி கோலமாய் 'ஓ' என்று ஓலமிட்டுக் கொண்டு அந்தப் படையை நோக்கி ஓடினேன். பின்னால் என்னை யாரோ துரத்தி வருவது போன்று பாசாங்கு செய்து திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு ஓடினேன். சளுக்கர்கள் 'வந்தாயா? வா!' என்று பரிகாசக் குரலில் கூறிக்கொண்டு என்னை அழைத்துப் போய் மற்றச் சிறைப் பிடிக்கப்பட்ட பெண்களுடனே சேர்த்து விட்டார்கள். சற்று நேரம் மற்ற ஸ்திரீகளைப் போல் நானும் ஓலமிட்டுக்கொண்டிருந்தேன். பிறகு மெள்ள மெள்ளப் பல்லக்கை நெருங்கிச் சென்று அதிலிருப்பது சிவகாமி தேவிதான் என்று தெரிந்து கொண்



டேன். சிவகாமியை அவ்வளவு மரியாதையுடன் அழைத்துப் போகும் காரணத்தையும் ஊகித்தறிந்தேன். அந்தச் சளுக்கர் படையின் தலைவனாகிய தளபதி சசாங்கன், சிவகாமி தேவியைப் பத்திரமாய்க் கொண்டு போய் வாதாபி சக்கரவர்த்தியிடம் ஒப்புவித்து பல்லவ நாட்டின் சிறந்த கலைச் செல்வத்தைக் கைகொண்டு வந்ததற்காகப் பரிசு கேட்கப் போகிறான்! இந்த எண்ணத்தினால் எனக்கு ஒருவாறு மன நிம்மதி ஏற்பட்டது. ஏனெனில், சிவகாமி தேவிக்கு உடனே தீங்கு எதுவும் நேராது என்று தைரியம் அடைந்தேன். ஆனால் சளுக்க ராட்சதப் படையால் சூழப்பட்ட சிவகாமியை அங்கிருந்து அப்புறப்படுத்தி அழைத்துச் செல்வது என்பது சாத்தியமான காரியமாகவே தோன்றவில்லை. அவரருகில் சென்று பேசக் கூட நான் துணியவில்லை. மற்ற ஸ்திரீகளைப்போல் ஆயனர் மகள் அழுது புலம்பாமல் தைரியமாயிருந்ததும் எனக்கு ஆறுதல் அளித்தது. அவரை அங்கிருந்து தப்புவித்து அழைத்துச் செல்வதற்கு எத்தனையோ உபாயங்களை யோசித்து யோசித்துப் பயன்படாது என்று கைவிட்டேன்.

இதற்கிடையில் நாங்கள் வட திசை நோக்கிப் போய்க்கொண்டேயிருந்தோம். வெள்ளாறு என்று வழங்கும் பொன்முகலி யாற்றங் கரைக்குப் போய்த் தங்கினோம். இவ்விடத்தில் தளபதி சசாங்கன் பெரும் மனக் குழப்பத்தை அடைந்ததாகக் காணப்பட்டது. அதன் காரணமும் சளுக்க வீரர்களின் சம்பாஷணைகளிலிருந்து தெரிந்து கொண்டேன். மணிமங்கலத்தில் வாதாபி சக்கரவர்த்திக்கும் மகேந்திர பல்லவருக்கும் நடந்த பெரும் போரைப் பற்றித் தூதர்கள் கொண்டு வந்த செய்திதான் காரணம். இந்தச் செய்தி தளபதி சசாங்கனுக்கு அவ்வளவு குழப்பம் ஏன் அளித்தது என்பதையும் நான் ஊகித்தறிந்தேன். வாதாபி சைன்யத்தில் பெரும் பகுதியுடன் புலிகேசி முன்னால் சென்று விட்டதாகவும், இதற்குள்ளாக அவர் வட பெண்ணைக் கரையை அடைந்திருக்க வேண்டும் என்றும் சசாங்கன் எண்ணிக் கொண்டிருந்தான். இப்போது புலிகேசி தனக்குப் பின்னால் தங்கி மாமல்லபுரத்துக்குப் பக்கத்தில் மணிமங்கலத்தில் சண்டையிட்டதாகச் செய்தி வந்ததும் சசாங்கன் திகைத்தது இயற்கைதானே? தனது நடத்தையில் புலிகேசிக்கு அதிருப்தியோ என்னமோ, அவரைப் பின்னால் விட்டு விட்டுத் தான் முன்னால் ஓடி வந்தது பற்றிக் கோபமோ என்னமோ என்று சசாங்கன் ரொம்பவும் தவித்துக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. பொன்முகலி ஆற்றங்கரைக்கு நாங்கள் வந்து சேர்ந்த மறுநாள் சசாங்கன் தன் சளுக்கப் படைகளுடன் தென் கரையில் இருந்து கொண்டு சிறைப் பிடித்த ஸ்திரீகளாகிய எங்களை மட்டும் அக்கரைக்கு அனுப்பினான். எங்களைக் காவல் புரிவதற்குச் சில சளுக்க வீரர்களை உடன் அனுப்பி வைத்தான்.

அக்கரை சென்றதும், 'இது ஒரு நல்ல சந்தர்ப்பம்; சிவகாமி தேவியை அழைத்துக்கொண்டு போய்ப் பக்கத்தில் காணப்படும் குன்றுகளிலே ஒளிந்துகொள்ளலாம். காவலர்கள் சிலர்தான் இருப்பதால் அவர்களுக்குத் தெரியாமல் இரவு நேரத்தில் தப்பிச் செல்லலாம்' என்று தீர்மானித்தேன். அன்றிரவு, எல்லோரும் தூங்க யத்தனம் செய்த சமயத்தில் நான் சிவகாமி தேவியின் அருகில் இருக்கும்படி ஏற்பாடு செய்துகொண்டேன். மற்றப் பெண்கள் எல்லாம் தூங்கிய பிறகு பிராகிருத பாஷையில் என்னை இன்னாரென்று தெரிவித்துக் கொண்டேன். சிவகாமி முதலில் பெரிதும் ஆச்சரியமடைந்தார். பிறகு, ஆயனரைப் பற்றிக் கேட்டார்; தங்களைப் பற்றியும் விசாரித்தார். தங்களைப் பற்றி எனக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. தாங்கள் தெற்கேயிருந்து திரும்பி வந்ததே தெரியாது. ஆகையால், ஆயனர் உயிர் பிழைத்திருக்கிறார் என்ற விவரம் மட்டும் சொன்னேன். பிறகு மெள்ள மெள்ள, என் யோசனையைத் தெரிவித்தேன். பிரபு! என் ஏமாற்றத்தை என்னவென்று சொல்வேன்?......"

யும் மாற்றி மாற்றிப் பார்த்து மகிழ்ந்ததுண்டு.

இம்மாதிரி ஞாபகங்கள் எல்லாம் மாமல்லருக்கு ஆரம்பத்தில் ஓரளவு இன்பத்தை யளித்தன. ஆனால் இடையிடையே "இனிமேல் அந்த மாதிரி அநுபவங்கள் தனக்குக் கிட்டப் போவதே இல்லை" என்ற நினைவு வந்ததும் மனதில் கொடிய வேதனை உண்டாயிற்று. நேரமாக ஆக, இன்ப உணர்ச்சி அடியோடு மறைந்து வேதனைதான் மிஞ்சியது. இனிமேல் பொறுக்க முடியாது என்ற மனோநிலை ஏற்பட்டதும் மாமல்லர் குதித்து எழுந்தார். விரைந்து சென்று குதிரை மீது தாவி ஏறினார். ஆயனர் வீட்டை நோக்கிக் குதிரையைச் செலுத்தினார்.

காஞ்சியிலிருந்து கிளம்பியபோது, அவர் மனதிலிருந்த அமைதி இப்போது இல்லை. அமைதிக்குப் பதிலாக இப்போது கோபமும் ஆத்திரமும் அவர் மனதில் குடிகொண்டிருந்தன. சிவகாமியைக் கொண்டு போன சளுக்கப் பகைவர்கள் மீது குரோதம் கொதித்து எழுந்தது.

சிவகாமியை மூடத்தனத்தினால் பறி கொடுத்தது மன்றிப் புத்த பிக்ஷுவை மாமல்லபுரத்தைக் காப்பாற்றுவதற்குப் போகச் சொன்ன ஆயனரின் மீது கோபம் கோபமாய் வந்தது.

புத்த பிக்ஷுவின் மீது இன்னதென்று விவரமாகாத சந்தேகமும் கோபமும் ஏற்பட்டன.

ஆ! அந்தப் பாஷாண்டியினிடம் தனக்கு எப்போதுமே நல்ல அபிப்பிராயம் கிடையாது. அவர் மனது வைத்திருந்தால் சிவகாமியைக் காப்பாற்றி யிருக்கலாமல்லவா? ஏன் காப்பாற்றவில்லை? அப்புறம் ஏன் ஆயனரிடம் வந்து செய்தி ஒன்றும் சொல்லவில்லை? பிக்ஷு என்ன ஆனார்? எப்படி மாயமாய் மறைந்தார்?

சிவகாமியின் அரங்கேற்றம் நடைபெற்ற அன்றிரவு, — புலிகேசியின் படையெடுப்புச் செய்தி வந்த இரவு.— பரஞ்சோதி காஞ்சிக்கு வந்து சேர்ந்த அதே இரவு.— இராஜ விஹாரத்தின் அருகில் புத்த பிக்ஷுவைச் சுட்டிக் காட்டிச் சக்கரவர்த்தி தனக்கு எச்சரித்தது மாமல்லருக்கு நேற்று நடந்ததுபோல் ஞாபகம் வந்தது.

உடனே, கோபம் தந்தையின் பேரிலேயே திரும்பிற்று.

ஆ! மகேந்திர பல்லவரின் தந்திர மந்திரங்கள், சூழ்ச்சிகள், வேஷங்கள்— இவற்றினாலேதான் பல்லவ ராஜ்யம் இன்றைக்கு இந்தக் கதியை அடைந்திருக்கிறது! தானும் சிவகாமியை இழக்கும்படி நேரிட்டிருக்கிறது! * * *

திடீரென்று ஒரு விபரீதமான சந்தேகம் மாமல்லரின் உள்ளத்தில் உதித்தது.

ஒருவேளை சிவகாமி சிறைப்படும் வண்ணம் சூழ்ச்சி செய்தவர் மகேந்திர பல்லவர் தானோ?

இல்லாவிடில் எதற்காகத் தன்னைப் போர்க்களத்துக்கு அனுப்பி விட்டு, மண்டபப்பட்டுக் கிராமத்திலிருந்து சிவகாமியைத் தருவிக்கிறார்?

எதற்காக அரண்மனைத் தோட்டத்திலே ஒரு சுரங்க வழியை ஏற்படுத்தி, அது கண்ணபிரானுடைய மனைவிக்குத் தெரியும்படியாகச் செய்திருக்கிறார்?

ஒரு வேளை அந்தப் பெண் கமலி கூடச் சக்கரவர்த்தியின் சதிக்கு உடந்தையா யிருந்திருப்பாளோ? எல்லாரும் சேர்ந்து தன்னை இப்படி வஞ்சித்து விட்டார்களோ?

ஆஹா! இது என்ன சதிகார உலகம்! துரோகமும் தீவினையும் நிறைந்த மாய உலகம்!

இத்தகைய மனோநிலையில் மாமல்லர் ஆயனர் வீட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தார். சிவகாமி சிறைப் பட்டது சம்பந்தமாக மர்மமாகவும் விளங்காமலுமிருந்த சில விஷயங்களை ஆயனரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள அவர் விரும்பினார். எனவே, வீட்டு வாசலுக்குச் சற்று தூரத்திலேயே குதிரையை நிறுத்தி விட்டுத் தானும் சற்று அங்கேயே நின்று மனதை அமைதிப்படுத்திக் கொண்டார். பிறகு, சாவதானமாக நடந்து வந்து ஆயனர் வீட்டுக்குள் நுழைந்தார்.

வீட்டுக்குள் நுழையும்போது உள்ளே பேச்சுக் குரல் கேட்டது அவருக்குச் சிறிது வியப்பையளித்தது.



# தேவ லோகத்தில்

( பதி )

**பாத்திரங்கள் :**—பிரம்மா, காபி, டீ, ஆரஞ்சு, பிஸ்ம்.

*[காபி, டீ, ஆரஞ்சு, பிஸ்ம் நால்வரும் கைகூப்பி நான்முகனை வணங்கிக் கொண்டு நிற்கிறார்கள். பிரம்மா ஆசனத்தில் வீற்றிருக்கிறார்.]*

**காபி :**—தேவா! என்னை ஏன் படைத்தீர்கள்? நான் படுந்துன்பம் சொல்ல முடிய வில்லையே!

**பிரம்மா :**—நீயும், டீயும் இல்லா விட்டால், லோகத்தில் சுகமேது? சந்தோஷமேது? அந்தஸ்தேது? அழகேது? எல்லாம் உங்களால் தானே உண்டாகின்றன?

**காபி :**—இருந்தாலும் சுகம் அனு பவிப்பது ஜனங்கள்! துன்பம் அனுபவிப்பது நாங்கள்! நான் பிறந்தது முதல் படுந் துன்பம் கொஞ்ச நஞ்ச மல்ல. என்னை அடித்து, மிதித்து, நசுக்கி, வெயிலிலே போட்டுப் பொசுக்கி, மூச்சுவிட முடியாமல் மூட்டை யிலே போட்டுக் கட்டி விடுகிறார் களே சுவாமி!

**பிரம்மா :**—மூட்டையில், இருக்க இருக்கத்தானே, உனக்கு மதிப்பு அதிகம்!

**காபி :**—இருக்கிற இடத்திலே இருந்தால்தானே மதிப்பு! இவர்கள் கிட்டே வந்தா மதிப்பேது?

**பிரம்மா :**—யாருகிட்டே?

**காபி :**—"கர் அ[illegible]ஸ்" கிட்டே, சுவாமி!...

**பிரம்மா :**—எல்லோரையும் விட, அவர் என்ன செய்கிறார்?

**காபி :**—தேவா! அதையேன் கேட்கிறீர்கள்!...எங்களைப் போட்டு வறுத்து, அரைத்து, பொடியாக்கி, டப்பிக்குள்ளே போட்டுக் கொஞ் சங்கூடக் காற்று வெளிச்சம் இல்

வாமல் அடைத்து விடுகிறார்கள். உள்ளே யிருந்து, மூச்சுவிட முடியாமல் ரொம்பக் கஷ்டமா யிருக்கிறது.

**பிரம்மா** :—அழகான டப்பிக்குள்ளே உன்னை அடைத்து, சுகமாக அடுக்கி வைத்திருப்பதா உனக்குக் கஷ்டம்?

**காபி** :—இப்படியே இருக்க ஜனங்கள் விட்டு விடுவார்களா?... "நர்ஸுஸ்" காபியை எடு. "நர்ஸுஸ்" டீயை எடு. என்று எங்களைத்தானே வாங்கிக் கொண்டு போகிறார்கள்? அதோடு விடுகிறார்களா!...... ஜனங்கள் கல்யாணத்துக்கு "நர்ஸுஸ்" காபி, டீ! பத்தியத்துக்கு "நர்ஸுஸ்" காபி—டீ! நோயாளிக்கு "நர்ஸுஸ்" காபி-டீ! குழந்தைகளுக்கு "நர்ஸுஸ்" காபி—டீ!, என்று ஒரு நாளைக்கு நூறு வேளை என்னைக் கொதிக்கிற வெந்நீரிலே போட்டு என் உயிரை வாங்கி... ஜனங்கள் தங்கள் உடம்பைக் காப்பாற்றிக் கொள்கிறார்களே சுவாமி!

**பிரம்மா** :—சரி! போதும்... டீ!... நீ ஏதேனும் சொல்லப் போகிறாயா?

**டீ** :—நான் வேறு சொல்ல வேண்டுமா?... காபியார் சொன்ன கஷ்டங்களெல்லாம், எனக்குந்தான் இருக்கிறது!

**பிரம்மா** :—ஓ!... ஆரஞ்சா?... நீ எப்பொழுது இவர்களோடு சேர்ந்தாய்?... உன் விஷயமென்ன?

**ஆரஞ்சு** :—என்னையும் கொஞ்ச நாளையிலே நசுக்கி, கசக்கி, சாறு பிழிந்து, மூச்சுவிட முடியாது, பாட்டிலிலே அடைத்து விடுவார்கள் போலிருக்கே!

**பிரம்மா** :—உன்னைக் கடைகளில் தேடி வாங்குவதென்றால் பிரம்மப் பிரயத்தனமா யிருக்கிறதே! உன்னைச் சாறாகப் பிழிந்து பாட்டிலில் அடைத்து வைத்து விட்டால் சிரமமில்லாமல் உன்னை எந்தக் கடையிலும் சுலபமாக வாங்கிக் கொள்ளலாமல்லவா? 'நர்ஸுஸ்' கம்பெனிக்காரர்கள் இந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டனர்! இனி 'ஆரஞ்சு ஜுஸ்' சுலபமாகக் கிடைக்கும்.

**ஆரஞ்சு** :—சரிதான்!...நீங்களும்... கம்பெனிக்காரர்களோடு சேர்ந்து விட்டீர்களா?

**பிரம்மா** :—அது யாரு?...... பிலிம்மா?... உன் விஷயமென்ன?

**பிலிம்** :—தேவாதி தேவர்களையெல்லாம் ஜனங்களுக்கு அறிமுகப்படுத்த, என் உயிரை வாங்கி விடுவார்கள் போலிருக்கே!

**பிரம்மா** :—என்ன!..... தேவாதி தேவர்கள் என்றால், என்னையுங் கூடவா?

**பிலிம்** :—உங்களை மாத்திரமல்ல! உங்கப்பா, மகாவிஷ்ணு!... உங்க மாமா பரமசிவன், மற்ற தேவாதி தேவர்கள், அசுரர்கள், மன்னாதி மன்னர்கள், வள்ளல்கள் எல்லோரையும், என் மூலமாகப் படம் பிடித்து, ஊர் ஊராகச் சுற்றவிடப் போகிறார்கள், தெரியுமா?

**பிரம்மா** :—என்னப்பா! எல்லோரும் அவரவர்கள் கஷ்டத்தைச் சொன்னார்கள்! நீ, என்னையே பிடித்து விடுகிறேனென்கிறாயே!

**பிலிம்** :—நானா செய்கிறேன், சுவாமி!... எல்லாம் "நர்ஸு" செய்யும் வேலைதான்!

**பிரம்மா** :—(ஆச்சரியத்தோடு) ஆ! "நர்ஸு" வேலையா?

(கண்களை விழித்து வாயைத் திறந்தார்)

[திரை]



# சைனாப்படம்

கி.ரா. கோபாலன்.

அன்று ஜயராமனோடு உட்கார்ந்து ஏதோ சங்கீத விஷயமாகச் சர்ச்சை செய்து கொண்டிருந்தேன். சமயலறையிலிருந்த அவனுடைய தாயார், என்னுடைய பேச்சுக் குரலைக் கேட்டு வெளியே வந்தாள். "ராஜா! உன்னைத் தான் இத்தனை நாளாக வருவயோ வருவயோன்னு பார்த்திண்டிருந்தேன். நீதான் சைனாப் படம் எழுதுவாயே? இதோ பார், இந்தமாதிரி எனக்கொரு படம் எழுதிக் கொடேன்!" என்று சொல்லி, அங்கு மாட்டியிருந்த ஒரு படத்தைக் காண்பித்தாள்.

இந்த வார்த்தைகளைச் சொல்லும் பொழுது அவளுடைய நெஞ்சு தழுதழுத்தது. புடவைத் தலைப்பால் கண்களில் தேங்கிய நீரைத் துடைத்துக் கொண்டாள்.

அவள் காண்பித்த படம் ஒரு சாதாரண சைனாக் காலண்டர். ஒரு அழகான சிறு பெண் கையில் பூக்கொத்தை வைத்துக் கொண்டிருந்தாள். இதைத் தவிர அந்தப் படத்தில் விசேஷ அம்சம் வேறொன்றும் இல்லை.

"மாமி! எதற்காக அந்தப் படத்தைப் பார்த்து இன்னொரு படம் எழுதணும்?" என்றேன்.

அந்த நெகிழ்ந்த குரலிலேயே மறுபடியும் அவள் பேச ஆரம்பித்தாள்.

"இந்த மாதிரி இல்லை. இதோ பார், இதைவிடக் கண் இன்னும் கொஞ்சம் அகலமாய் இருக்கட்டும்; ஒரு பக்கத்திலே தலைமயிர் இந்த மாதிரியே பிசிரம் பிசிரமாய்த் தொங்கட்டும்; ஒரு பக்கத்திலே சின்னதாப் பின்னிச் சுருட்டிக் கட்டிப் பூ வைத்திருக்கணும். இந்த மாதிரி கவுன் போட்டாப் பாதகமில்லை. நெத்தியிலே சின்னதாக ஒரு பொட்டு வை..."

பாவம்! இந்த வார்த்தைகளை எவ்வளவு சமாளித்துக் கொண்டு அவள் சொன்னாள், தெரியுமா? அவள் மேலும் சொல்ல நினைத்த வார்த்தைகளை அவள் நெஞ்சிலிருந்து குமுறி வந்த அழுகை தடுத்து விட்டது.

பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஜயராமன், "ராஜா! என் தங்கை வஸந்தாவைத் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும்" என்றேன்.

ஜயராமன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, "அது போய்விட்டது" என்றான்.

நான் திடுக்கிட்டேன். "என்ன போய் விட்டதா? எனக்குத் தெரியாதே......!" என்றேன்.

"உனக்குத் தெரியாது. நீதான் ஊரிலே இல்லையே" என்றான் ஜயராமன்.

★

யுத்தத்தினாலும், பஞ்சத்தினாலும் உலகில் எவ்வளவோ கோடி ஜனங்கள் அழிந்து விட்டனர். அவர்களைப் பற்றி என் உள்ளம் அவ்வளவாகச் சிந்தித்ததில்லை. ஆனால் ஹிருதயமறிந்த ஒரு சிறு ஜீவனின் பிரிவு, என் உள்ளத்தில் எல்லையற்ற சோகத்தையும் அனுதாபத்தையும் உண்டாக்கி விட்டது. சுவரில் மாட்டியிருந்த அந்தச் சைனாப் படத்தையே என் கண்கள் கூர்ந்து நோக்கின. ஆம்; அப்படியே இருந்தது முக ஜாடை யெல்லாம்! வஸந்தாவிற்கும் அப்படத்திலுள்ள குழந்தைக்கும் கொஞ்சம் தான் வித்தியாசம்!

மூன்று வயதுக் குழந்தை; பழகியது சில தினங்கள். ஒருநாள் நானும் ஜயராமனும் வாசல் திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். வஸந்தா வாசல் நிலைப் படிக் கட்டையிலுள்ள தாழ்ப்பாள் கம்பியில், ஒரு வாழை நாரைக் கோர்த்து, மத்து இழுப்பதுபோல் மாறி மாறி இழுத்துக் கொண்டிருந்தாள். குழந்தைகளுக்கு சகபாடிகள் இருந்தால்தான் விளையாடிப் பொழுது போக்கலாம் என்று அவசியமில்லை. அவர்களுடைய பாசபக்ஷமற்ற இளம் உள்ளத்திற்கு எந்தப் பொருளும் கூடி விளையாட இசைந்து வரும். அந்தக் கயிற்றை மாறி மாறி இழுப்பதில் என்ன ஸ்வாரஸ்யமோ! வஸந்தா அலுக்காமல் ஆர்வத்தோடு விளையாடிக் கொண்டிருந்தாள். நான் ஜயராமனைப் பார்த்து, "இவள்



"அட முனியா! நாங்கள் நாலு நாளாக் கழுதையைத் தேடிக்கொண்டு இருக்கோம், அகப்பட வில்லையே! நீ மட்டும் அதுக்குள்ளே எப்படிப் பிடித்துக் கொண்டு வந்தே?"

"இதுதானு பிரமாதம்? நான் கழுதையா யிருந்தால் எங்கே போவேன் என்று யோசித்துப் பார்த்தேன். உடனே அந்த இடத்துக்குப் போய்ப் பார்த்ததும் கழுதை இருந்தது; பிடித்துக் கொண்டு வந்து விட்டேன்!"

---

உன் தங்கையா?" என்றேன். அவன் "ஆமாம்" என்று சொல்லிவிட்டு, "வஸந்தா! இங்கே வா!" என்றான். அவள் 'முடியாது' என்பதுபோல் கழுத்தைச் சாய்த்து ஆட்டிவிட்டு மறுபடியும் தன்னுடைய ஸ்வாரஸ்யமான விளையாட்டில் கவனத்தைச் செலுத்தினாள். ஐயராமன் சட்டென்று எழுந்து அவளை அப்படியே தூக்கிக்கொண்டு வந்து திண்ணையில் உட்கார வைத்து, "இதோ பாரு! இந்த மாமா உன் பாட்டைக் கேட்கணுங்கிறார். ஒரு பாட்டுப் பாடு" என்றான்.

அவள் "ஊஹூம்!" என்று சொல்லிவிட்டு அவனிடமிருந்து விடுபட நினைத்தாள்.

"பாட மாட்டாயா? இல்லாட்டா அந்த மாமா எல்லாரு கிட்டேயும் நீ அசடென்று சொல்லிடுவார்!" என்றான்.

வஸந்தா அசட்டுப் பட்டம் வாங்க பயந்தவள்போல், "நான் சமத்தோல்லியோ—பாடட்டுமா?" என்றாள் ஐயராமனிடம்.

"நீ சாதாரண சமத்தில்லே — ரொம்ப சமத்து. பாடு!" என்றான் ஐயராமன்.

உடனே அவள் எழுந்து கச்சேரி பாணியில் உட்கார்ந்து, 'மானத்தின்மீதே மயிலாடக் கண்டேன்; மயில் குயில் ஆச்சுதடி' என்ற அடிகளையே திருப்பித் திருப்பி இருபது தடவை பாடிய பிறகு, ஐயராமன் "போதும்; வேறே பாட்டுப் பாடு" என்றான்.

'கண்ணன் வரும் அழகைக் காணடி — கன்றுகள் மேய்த்து இங்கே — கண்ணன் வரும் அழகைக் காணடி'—இப்படியே சுமார் பத்துப் பன்னிரண்டு பாடல்களின் முதல் அடியை மாத்திரம் சொல்லி விட்டு, "அவ்வளவுதான்! இனிமேல் தெரியாது!" என்று சொல்லிவிட்டு உள்ளே ஓடிப்போய் விட்டாள் வஸந்தா.

அதற்குப் பிறகு நான் அவளைச் சந்திக்கவில்லை.

★

என் மனதில் அப்பொழுது ஒரு துடிப்பு—ஆர்வம். கேவலம், இந்தச் சைனப் படம் தன் குழந்தையின் பிரிவால் தவிக்கும் ஒரு தாய்க்கு எவ்வளவு ஆறுதலை அளித்து வருகிறது! இதையே அவள் விரும்பியபடி மாற்றி எழுதிக் கொடுத்தால், அந்தத் தாயுள்ளத்திற்குத் தன் அருமைக் குழந்தையையே திரும்பப் பெற்றுவிட்ட உணர்ச்சியும் ஆறுதலும் ஏற்படாதா? அந்த ஆத்மார்த்திகமான தாயுள்ளத்தின் நன்றி கோடிப் பொன் கொடுத்தாலும் நமக்குக் கிடைக்குமா?

இப்படி எண்ணிய நான் அந்தப் படத்தைச் சுருட்டிக் கையில் எடுத்துக்கொண்டு கூடிய சீக்கிரம் எழுதித் தருவதாக ஐயராமனிடம் வாக்களித்து விட்டு வீட்டிற்கு வந்தேன்.

என்னுடைய ஆர்வத்தையும், ஆசையையும் வீணாகப் போக்காமல் நான்கு நாட்கள் ஒரே தீவிரமாக உட்கார்ந்து அந்தப் படத்தை எழுதினேன். ஐயராமனுடைய தாயார் சொல்லியபடி எந்தெந்த இடங்களில் மாறுதல் செய்யவேண்டுமோ அங்கெல்லாம் செய்தாகி விட்டது. நான் எழுதிய படத்தைத் தூரத்திலும், சமீபத்திலுமாக வைத்து அரை மணி நேரம் பார்த்தேன். என் மனதில் ஏற்பட்ட திருப்தி லேசாகக் குறைய ஆரம்பித்தது. வஸந்தாவின் பூரண முகப் பொலிவும் அதில் இல்லை யெனப் பட்டது. படம் பொருத்தமானதாய் இல்லை என்ற எண்ணம் தீவிரமாகவே அதைக் கிழித்தெறிந்துவிட்டு வேறொன்று எழுதுவதில் முனைந்தேன்.

இரண்டாவது படமும் எழுதி முடிந்தாய் விட்டது. என் மனதிலும் பூரண திருப்தி ஏற்பட்டது. ஐயராமன் வந்து படத்தைப் பார்த்தான். அவனுடைய வார்த்தைகள் என் மனதில் ஏற்பட்டிருந்த திருப்தியை

சின்னாபின்னப்படுத்தி விட்டன. "ராஜூ எல்லாம் சரியாகத்தான் எழுதியிருக்கே! ஆனால் வஸந்தாவின் முகச் சாயல்தான் அவ்வளவு பொருத்தமாக இல்லை. இன்னும் என்ன குறைவோ, பிசகோ எனக்கே தெரியவில்லை!" என்றாள்.

அவளுடைய வார்த்தைகள் எனக்கு ஊக்கத்தை அளிக்கக்கூடிய முறையில் இல்லாவிட்டாலும், நான் சலிப்படையவில்லை. ஊக்கம் தளராத துடிப்புடன் மூன்றாவதாக ஒரு படம் எழுத ஆரம்பித்தேன்.

படத்தைப் பூர்த்தி செய்தவுடன் பார்த்தேன். என்னை அறியாமல் ஒரு குதி குதித்தேன். உண்மையில் அந்தப் படத்திற்கு உயிர் மாத்திரம் இருந்திருந்தால் நான் குதித்ததைப் பார்த்து அது சிரித்திருக்கும். வஸந்தாவின் முகச் சாயல் அப்படியே படத்தில் பிரதிபலித்திருந்தது. ஆவலும் ஆத்திரமும் மிஞ்ச, படத்தைச் சுருட்டி எடுத்துக் கொண்டு ஜயராமனின் வீட்டை நோக்கி நடந்தேன். இல்லை; ஓடினேன். தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த ஜயராமனின் தாயார், என்னைக் கண்டதும் எழுந்து ஆவலுடன், "வா, ராஜூ! படம் எழுதியாச்சா?" என்று சொல்லி வரவேற்றாள். நான் எவ்விதப் பதிலும் சொல்லாமல் படத்தை அவளிடம் கொடுத்துவிட்டு, அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். என்னுடைய அப்பொழுதைய நிலை, ஒரு ஏழைப் புலவன் ஒரு கவிதையை எழுதி அரசனிடம் கொடுத்துவிட்டு, அவருடைய அபிமானத்தையும், வெகுமானத்தையும் ஆர்வத்தோடு எதிர்பார்ப்பது போலிருந்தது.

அவள் எவ்வளவு ஆர்வத்தோடு படத்தை வாங்கினாளோ அந்த ஆர்வம் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டுவிட்டது, படத்தைப் பார்த்ததும்!

அவள் அதிருப்தி நிறைந்த குரலில், "இது என் வஸந்தா மாதிரியா இருக்கு! இல்லையே?" என்றாள்.

இந்த வார்த்தை என்னுடைய கலைத் திறமையையே சோதனை செய்வதுபோலிருந்தது. இவ்வளவு சிரமத்திற்குப் பிறகு ஒரு ஆறுதலான வார்த்தை கூட இல்லாவிட்டால்! — நான் மனமுடைந்து மௌனமாக நின்றேன் — ஏன், எனக்குக் கோபம் கோபமாகக்கூட வந்தது.

நான் அந்த மாமியைப் பார்த்தேன். அவள், அந்தச் சைனாப் படத்தையும் நான் எழுதியதையும் மாறி மாறிப் பார்த்தபடியே, "நீயும் சிரமப்பட்டுத்தான் எழுதியிருக்கே! என்ன செய்யறது! வஸந்தாவிற்குப் பத்துப் பதினைந்து வயசாயிருந்தா ஒரு வேளை இப்படி இருப்பாளோ, என்னவோ? இந்தக் கண்ணை இவ்வளவு நீட்டிப் போடாமல் இன்னும் கொஞ்சம் குறுக்கிக் குண்டாப் போட்டா அவளுடைய ஜாடை யிருக்கும்னு நினைக்கிறேன்" என்றாள்.

என் மனதிலெழுந்த கோபமும் படபடப்பும் கொஞ்சம் கொஞ்சமாகத் தணிந்தது. நான் என்ன சித்திரக்காரனாயிருந்தாலும் ஒரு தாயைவிட ஒரு குழந்தையின் அங்க லக்ஷணங்களை அவ்வளவு அதிகமாக அறிந்து கொண்டிருக்க முடியுமா? அது ஒரு சாதாரண சைனாப் படமாயிருந்தாலும் அதன் முகத்தில் வசந்தாவின் சாயல் பிரதிபலித்து, அந் தாயின் ஆர்வத்தைக் கிளறிக் கொண்டிருந்தது. நான் ஒரு சித்திரக் கலைஞனென்றால் வஸந்தாவின் பூர்ண முகப் பொலிவும் நிறைந்த ஒரு சித்திரத்தை எழுதி, அந்தத் தாயின் ஹிருதய நன்றியைப் பெறவேண்டும். அவள் அந்தச் சைனாப் படத்தையே பிறகு மறந்துவிட வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் எழுந்தது. வேறொரு படத்தை வெற்றிகரமாக எழுதி முடிக்க எண்ணி வீட்டிற்கு வந்தேன்.

★

எந்தக் காரியத்தைச் சுறுசுறுப்பாகவும் ஆர்வத்தோடும் செய்ய நினைக்கிறோமோ அவைகளுக்குத் தடங்கல் ஏற்படுவது சகஜமாய் இருக்கிறது. நான் படம் எழுத ஆரம்பித்தேன். வாசலில் தந்திச் சேவகன் வந்து நின்று, "ஸார்!" என்றான். 'மதுரையில் சித்தப்பாவிற்கு உடல் நிலை கவலையாயிருக்கிறது; உடனே புறப்பட்டு வரவும்'



என்று தந்தி. வீட்டில் போட்ட சாமான்கள் போட்டபடி கிளம்பினேன். பல அசந்தர்ப்பங்களினால் மதுரையிலேயே ஒரு மாதம் தங்கும்படியாக நேர்ந்தது. ஊருக்குத் திரும்பி வந்தபொழுது முதலில் வசந்தாவின் படத்தைப் பூர்த்தி செய்வதிலேயே என் கருத்துப் பூராவும் இருந்தது. எழுத ஆரம்பிக்கும் பொழுது அந்தச் சைனுப் படத்தைத் தேடினேன்; காணோம். அதை எங்கே வைத்தேன் என்று அந்தக் குழப்பத்தில் எனக்கு ஞாபகமில்லை. தாயாரைக் கேட்டதில் "வீட்டிற்கு எத்தனையோ பேர் வரா, போரு! படம் நன்னாயிருக்கேன்னு யாராவது எடுத்துக் கொண்டு போயிருப்பா!" என்றாள். உறவினர்களையும் சிநேகிதர்களையும் கேட்டுப் பார்த்தேன். அவர்கள் வீட்டிற்கெல்லாம் போய்ச் சோதனை போடுவது போல் பார்த்தேன். படம் கிடைக்கவில்லை.

தன் உயிரையே அதன்மேல் வைத்திருந்த ஜயராமனின் தாயாருக்கு நான் என்ன பதில் சொல்வது! என் மூளை குழம்ப ஆரம்பித்தது. ஒருவேளை ஜயராமனே வந்து தன்னுடைய தாயாரின் தொந்தரவு தாங்காமல் எடுத்துக்கொண்டு போயிருப்பானோ? இப்படிப் பலவிதமாக மனம் குழம்பியபடி பயித்தியம் பிடித்தவன்போல் உட்கார்ந்திருந்தேன்.

அன்று சாயந்திரம் ஜயராமனே என்னைத் தேடிக்கொண்டு வந்துவிட்டான். வரும் பொழுதே "அப்பா, ராஜா மஹாராஜாவா! போதும் நீ படம் எழுதிக் கொடுத்தது! அந்தக் காலண்டரையாவது கொடு. என் அம்மா கிடைத்திற்கு கிடைம் துடியாய்த் துடிக்கிறாள்!" என்று சொல்லிக்கொண்டு வந்தான்.

என் தலையில் இடி விழுந்தது போலிருந்தது. கொலை செய்தவன்கூட அவ்வளவு பீதியும், கலவரமும் அடைந்திருக்க மாட்டான். அவனுக்கு என்ன பதில் சொல்வது என்று திகைப்போடு சிலைபோல் நின்றேன்.

"என்னடா அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டாயே? என்ன சமாசாரம்?" என்றான் ஜயராமன்.

மெதுவாக மனதில் தைரியத்தை வருவித்துக்கொண்டு பேச ஆரம்பித்தேன். "ஒன்றுமில்லை; அந்தக் காலண்டரை எங்கேயோ கைதவறி வைத்து விட்டேன்!" என்றேன்.

ஜயராமன் ஒரு துள்ளுத் துள்ளி "அதைத் தொலைத்துவிட்டாயா?" என்றான்.

"அது எங்கே போய்விடும்? கொஞ்சம் கவனமாகத் தேடினால் அகப்பட்டு விடும்" என்றேன், கடன் வாங்கியவன் பொய்ச் சாக்குச் சொல்வது போல!

ஜயராமன் அப்படியே இடி விழுந்தவன் போல் உட்கார்ந்து விட்டான்.

★

நாளையோடு வாரம் ஒன்றாகப் போகிறது. முன்பு இரண்டரை அணா விற்ற அந்தச் சைனாக் காலண்டர் இப்பொழுது இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தால்கூடக் கிடைக்காது போலிருக்கிறது. ஊர் பூராவும் சுற்றினேன். அந்த மாதிரிப் படம் அகப்படவேயில்லை.

என் மனதிற்கு நிம்மதியே இல்லை. குழந்தையைப் பறிகொடுத்த ஒரு தாய், தன் உணர்ச்சி முழுவதையும் அந்தச் சைனுப் படத்தின்மீது சுமத்தி யிருந்தாள். போகும்போதும் வரும்போதும் தன் குழந்தையை எவ்வளவு ஆர்வத்தோடும் ஆசையோடும் பார்ப்பாளோ அப்படிப் பார்த்துக்கொண்டிருந்தாள். 'அந்தப் படம் தொலைந்து விட்டது!' என்பதை அவள் கேட்டால் எமனை விட என்னைக் கொடியவனாகத்தானே நினைப்பாள்!

எப்படியாவது அந்தப் படத்தை நான் திருப்பிக் கொடுத்தால்தான் நிம்மதியோடு உலகில் மனிதனாக நடமாட முடியும். கையில் பூக்கொத்தை வைத்து அணைத்தபடி நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் குழந்தை — சைனாவில் தயாரிக்கப்பட்டது என்று கீழே சிறிய எழுத்தில் ஆங்கிலத்தில் எழுதியிருக்கும் — சுமார் மூன்றடி நீளமும் இரண்டடி அகலமும் இருக்கும். இந்த அடையாளங்கள் உள்ள படம் எங்கே, யாரிடமிருந்தாலும் தயவு செய்து தெரிவியுங்கள். அதை எப்படியாவது — திருடியாவது கொண்டு வந்து கொடுத்தால்தான் நான் ஒரு சாபக்கேட்டிலிருந்து தப்ப முடியும் — நிம்மதியாகத் தூங்க முடியும் — பசியறிந்து உண்ண முடியும் — மனிதன் என்று உலகில் சொல்லிக்கொள்ள முடியும். என்மீது உங்களுக்குத் தயவு இருக்குமா? எனக்காகச் சற்றுக் கவலை எடுத்துக் கொள்ளுங்கள்.

ஞாபகம் இருக்கட்டும்; சைனுப் படம்!

# ஓர் இரகசியம்!

எம். எஸ். சபரிராஜன்

கடைசியாக, இன்று அந்த இரகசியத்தை உங்களிடம் சொல்லி விடுவதென்றே முடிவு செய்திருக்கிறேன்.

எமனிடம் எனக்குப் பயம் இல்லை. எனக்கு வயது எண்பது என்று ஜோசியர் சொல்லியிருக்கிறார். ஆனால், சாவு லாரி ஜாதகத்தை எல்லாம் பார்த்துக்கொண்டா வருகிறது? ஆகையால், காலாகாலத்திலேயே விஷயத்தைச் சொல்லி விடுவது நலம் அல்லவா?

நான் நாள்தோறும் பலவிதமான துன்பங்களை அனுபவிக்கிறேன். எத்தனையோ விதமான பெருங் கஷ்டங்களை முன்பு அனுபவித்தும் இருக்கிறேன். அம்மாதிரியான சமயத்தில் எல்லாம், முகவாய்க் கட்டையின் மேல் விரலை வைத்துக் கொண்டு, 'இத்தகைய கஷ்டங்களிலிருந்து தப்புவதற்கு வழி ஏதாவது இருக்கிறதா?' என்று ஆராய்வேன். எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்த பிறகு, ஒரே ஒரு வழி மாத்திரம் பிரகாசமாக, மேகத்திலிருந்து தோன்றும் மின்னலைப் போலத் தோன்றும்.

அப்படி என்ன அற்புதமான வழி?

'கஷ்டங்களிலிருந்து தப்புவதற்கு வழியும் இருக்கிறதா? அப்படியானால் வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கும்!' என்று நீங்கள் அதிசயிக்கிறீர்கள் அல்லவா? சொல்லுகிறேன்:

கஷ்டங்களிலிருந்து தப்புவதற்கு வழி, கஷ்டங்களை அனுபவிக்காமலே இருப்பது. அப்படி என்றால்? புதிர்மாதிரி இருக்கிறது அல்லவா? விளக்குகிறேன்: கஷ்டங்களிலிருந்து தப்பிக்க வேண்டுமானால், கஷ்டம் மிகுந்த இந்த உலகத்திலிருந்து மறைந்து போவது. சுருக்கமான, சுலபமான வழி. இன்னும் விளங்கவில்லையா? இறந்து போவதுதான்.

★

வேதாந்தத்துக்கே புரட்சிகரமாக விளங்கும் இந்தத் தத்துவத்தை நான் கண்டுபிடித்து ஐந்தாறு வருஷங்களாகின்றன. அதன் பிறகு நான் இன்னும் எவ்வளவோ துன்பங்களையும் வேதனைகளையும் அனுபவித்திருக்கிறேன். அப்படியிருந்தும், நான் என்னுடைய ஆராய்ச்சியைச் செயலில் காட்டாமல், இந்த மாதிரியாகக் கட்டுரையும் கதையும் எழுதி வீணாக என் நேரத்தைப் போக்கிக் கொண்டிருக்கிறேன் என்பது அதிசயமான விஷயம் அல்லவா?

உயிருக்கு நான் பயந்தவன் என்று நினைக்கிறீர்களா?

இல்லவே இல்லை! பூ. இது யாருக்கு வேண்டும்?

நான் சொன்னால் நீங்கள் நம்பமாட்டீர்கள்:

சாவைப் பற்றி எனக்குக் கொஞ்சமும் கவலை இல்லை, பயமும் இல்லை. உண்மையைச் சொல்லுகிறேன். எத்தனையோ முறை பாம்புப் புற்றருகே நின்றிருக்கிறேன். அதில் குச்சியை விட்டும் துழாவியிருக்கிறேன். போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் இறந்த இடத்தில் நின்று லாரியின் வரவுக்காகக் காத்துக்கொண்டும் இருந்தேன். இந்தப் பாழாய்ப்போன லாரி ஒன்றாவது என்னருகே வரவேண்டுமே, இல்லை!

அப்புறம், ஆற்றிலாவது கிணற்றிலாவது விழுந்து உயிரை விட்டு விடலாம் என்று நினைத்து, ஆற்றையும் கிணற்றையும் தேடிப் பார்த்தேன். ஆறு எங்கே இருக்கிறது? கூவம் நதி மாத்திரம் இருக்கிறது. இருபத்தாறு வருஷ காலம் புனித வாழ்க்கை நடத்திய என் தேகத்தை, கேவலம், இந்தச் சாக்கடைத் தண்ணீர் சங்கமமாகிய கூவம் நதியிலா போடுவது?



அந்த யோசனையையும் கைவிட்டேன். அப்புறம், கிணறு.

சென்னை நகரிலே கிணறுகள் அபூர்வம். அதிலும் பொதுக் கிணறுகள் இல்லையென்றே சொல்லலாம். தனிப்பட்டவர்கள் வீட்டிலுள்ள கிணற்றில் விழுந்

தான், அவர்கள் நம் மேல் அனுதாபம் கொள்வதற்குப் பதிலாக, "இந்தப் பாழாய்ப் போனவன் சாகவேண்டுமானால் நம் வீட்டுக் கிணறுதான் கிடைத்ததா?" என்று நம்மைச் சபிப்பார்கள். நாம் செத்து பூமிக்கடியிலே மறைந்து, நம் எலும்புகள் மண்ணோடு மண்ணாய்ப் போயிருந்த போதிலும், நம்முடைய பேயையோ பிசாசையோ அந்தக் கிணற்றருகே கண்டதாக அந்த வீட்டுப் பெண்மணிகள் சொல்லி, அது வேறு வசை கிடைக்கும்.




ஆகையால் அதுவும் பலன் இல்லை.

இதையெல்லாம் யோசித்துப் பார்த்து, "பகவானே, உயிரை விடலாம் என்றால் அதற்கும் வழியில்லையே!" என்று வருந்தியவாறு ஒரு நாள் மாலை ஏழரை மணிக்கு அந்தி மயங்கிய நேரத்தில், பீச்சுக்குப் போய் விட்டு ஹைகோர்ட்டுக்குள்ளே நுழைந்து வந்தேன். அங்கே ஏ. ஆர். பி. நெருப்பணைக்கும் தண்ணீர்த் தொட்டி இருந்தது. வழவழவென்று சிமெண்டு பூசி, பார்ப்பதற்கும் அழகாய் இருந்தது. சாவதாயிருந்தாலும் இந்த மாதிரிக் கிணற்றில் அல்லவா விழுந்து சாகவேண்டும் என்று சந்தோஷப்பட்டுக் கொண்டு, நாற்புறமும் பார்த்தேன். யாரையும் காணோம். மறு சிமிஷம் தடாலென்று அதில் குதித்தேன். அப்போதும், இந்த எமன் வருகிறானா? என் துரதிர்ஷ்டம், எங்கிருந்தோ இரண்டு ஏ. ஆர். பிக்காரர்கள் வந்து உள்ளே குதித்தார்கள். ஒருவேளை, அவர்களும் தற்கொலை செய்துகொள்ள வந்திருக்கிறார்கள் போலும் என்று நான் கருதினேன். ஆனால், அந்தக் கிராதகர்கள் என் தலைமயிரைப் பிடித்து மேலே தூக்கிக் கொண்டு வந்தார்கள். நான் கொஞ்சமும் அஞ்சாமல் அவர்களைப் பார்த்து விழித்தேன். என்னுடைய நன்றியறிதலை எதிர்பார்த்த அவர்கள், நான் மௌனமாயிருப்பதைப் பார்த்துக் கோபமுற்று, "என்ன சார், பார்த்துப் போகக் கூடாதா?" என்றார்கள். "பார்த்துத்தான் போனேன்!" என்றேன் நான் எரிச்சலாக.

இந்த மாதிரியாக அந்த முயற்சியும் வீணாயிற்று. அப்புறம் வேறு ஏதாவது வழி இருக்கிறதா என்று யோசித்தேன். "ஒரு சிறந்த இலட்சியத்துக்காக ஒரு மனிதன் உயிரை விடத் தயாராய் இருக்கிறான். வேண்டியவர்கள் மனுச் செய்து கொள்ளலாம்" என்று பத்திரிகைகளில் விளம்பரம் பண்ணலாமா என்று பார்த்தேன். அது கேலிக்கு இடமாகலாம் என்று கருதி அந்த எண்ணத்தையும் கைவிட்டேன்.

★

நான் சாவதற்காகச் செய்த முயற்சிகள் இவை. இதையெல்லாம் எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், எனக்குச் சாவைப் பற்றிக் கொஞ்சமும் கவலை இல்லை, பயம் இல்லை, இந்த உயிரை நான் பொருட்படுத்தவே இல்லை என்பதை உங்களுக்குத் தெரிவிப்பதற்காகவே.

சரி, இப்போது மாத்திரம் பதைப்படுகிறீர்கள் போலிருக்கிறதே, ஏன்? புதிய காதற் சுழலிலே அகப்பட்டுக் கொண்டீரா? கல்யாணம் பண்ணிக் கொண்டீரா? மனைவியையும் குழந்தைகளையும் விட்டுப் போக மனம் இல்லையா என்று நீங்கள் கேட்பது காதில் விழுகிறது.

அல்ல, அல்ல, அந்த மாதிரியான துர்ப்பாக்கியம் ஒன்றும் நேரவில்லை. நான் கவலைப்படுவதற்கு யாரும் இல்லை, என்னைப் பற்றிக் கவலைப்படுவதற்கும் யாரும் இல்லை. ஐந்து வருஷத்துக்கு முன்பு நான் உயிரை விட எவ்வளவு ஆவலாயிருந்தேனோ அதைக் காட்டிலும் பதின் மடங்கு ஆவலாய் இருக்கிறேன் இப்போது. செத்துப் போவதற்குப் பல சுலபமான வழிகளும் இப்போது இருக்கின்றன. பக்கத்து வீட்டிலே இருக்கும் சப் இன்ஸ்பெக்டர் எனக்கு நண்பர். அவருடைய துப்பாக்கியும் கிடைக்கும். ஆகவே இதில் சிரமம் எதுவும் இல்லை.



ஆனால், நான் நாளை உயிரை விடக் கூடாது. அதற்குக் காரணம் இருக்கிறது. அது ஓர் இரகசியம், பெரிய இரகசியம்.



"ஸார், இந்த ஊருக்கு மேற்கு எது ஸார்!"

"இன்னும் கொஞ்சம் மேற்காலே போய் விசாரியுங்க; சொல்லுவார்கள்!"

சும்மாயிருக்காமல் ஒரு நண்பர் நான்கு வருஷத்திற்கு முன்னால் என்னை இரண்டாயிர ரூபாய்க்கு இன்ஷ்யூர் செய்துகொண்டு போனார். இந்த மூன்று வருஷங்களாக, எத்தனையோ பணக் கஷ்டங்களுக் கிடையே அதைத் தவறாமல் கட்டி வந்திருக்கிறேன். நான் தற்கொலை செய்து கொண்டால் அதில் ஒரு தம்பிடிகூட எனக்குக் கிடைக்காதாம்! இன்ஷ்யூரன்ஸ் விதிகளிலே அந்த மாதிரியாக ஒன்று இருக்கிறதாம்!

நான் சிறுகச் சிறுகச் சேர்த்த பணத்தை, யாருக்கும் உபயோகம் இல்லாமல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி வாயில போட்டுக் கொள்வதில் எனக்கு விருப்பம் இல்லை.

நான் செத்துப்போனால், வாழ்க்கையிலே நொந்து இதயம் குமுறிய இந்தத் துர்ப்பாக்கியனுக்காக ஞாபகார்த்த நிதியோ ஞாபகச் சின்னமோ யாரும் ஏற்படுத்தப் போவதில்லை. ஏற்படுத்துவார்கள் என்று எதிர்பார்ப்பதும் அகம்பாவம். இன்னும் ஒரு பத்து வருஷகாலம் வாழ்ந்து, பணத்தை முற்றிலும் பெற்றுக்கொண்டு, எனக்கு நானே ஒரு ஞாபகச் சின்னம் ஏற்படுத்தி, அதற்கு விமரிசையாகத் திறப்பு விழாவும் நடத்திவிட்டு, அப்புறம் டிராமிலோ பஸ்ஸிலோ விழலாம்; அல்லது பக்கத்து வீட்டுக்காரர் துப்பாக்கியின் உதவியை நாடலாம்.

ஆகையால், நான் இப்போதெல்லாம் பாம்புப் புற்றருகே போவதில்லை. மௌண்ட் ரோட்டில் லாரிக்காகக் காத்திருப்பதில்லை. தற்செயலாகச் செத்தாலுங்கூட, அது தற்கொலை என்று சொல்லி இந்த இன்ஷ்யூரன்ஸ்காரர்கள் பணத்தை மோசம் செய்து விட்டால் என்ன செய்வது?

ஆகையால் நானும் வாழ்கிறேன். இன்ஷ்யூரன்ஸுக்காக உயிர் வாழ்கிறேன்; உயிர் வாழ்வதற்காக இன்ஷ்யூர் பண்ணியிருக்கிறேன்.

என்ன ஆகிறதோ, பார்ப்போம்!

★ ★

# ஒரு நல்ல பழக்கம்

பொது உடைமைக் கட்சியை ருஷியாவில் புதிதாக நிலைநாட்டிய காலம் அது. அக்கட்சியின் தலைவர்தான் ஸ்டாலின். ஒரு நாள் அவரை அவசரமாகப் பார்ப்பதற்கு அவர் காரியதரிசி வந்தார். வந்தவர் திடுக்கிட்டு நின்று விட்டார். காரணம், ஸ்டாலினின் அறையிலிருந்து பலமான கோபக்குரல் கேட்டது! ஆம், அது தோழர் ஸ்டாலினுடையதுதான். "இதென்ன அக்கிரமம்! நான் நேற்று சொல்லவில்லையா? தினம் தினம் சொல்வதற்கு நீ என்ன பச்சைக் குழந்தையா? உன் அஜாக்கிரதையால் தேசமெல்லாம் நஷ்டம் அடைகிறது என்பது உனக்குத் தெரியாதா?............" இப்படியே அதட்டிக் கொண்டிருந்தார் ஸ்டாலின். காரியதரிசியால் இனியும் பொறுக்க முடியவில்லை. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கதவைத் திறந்து உள்ளே சென்றார் நடுங்கிக்கொண்டே. கோபத்தால் சிவந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தார் தோழர் ஸ்டாலின். ஆனால் வேறு ஒருவரையும் காணவே இல்லை!

"என்ன ஐயா, விறைத்துப் பார்க்கிறீர்?" என்று சீறினார் ஸ்டாலின்.

"அந்த.........இவ..........எங்கே..........?" என்று காரியதரிசி கேட்டார்.

"எவர் ஐயா எங்கே?"

"நீங்கள் அதட்டிக் கொண்டிருந்தீரே, அவர்......"

"நாசமாய்ப் போச்சு! நான் யாரையும் அதட்டவில்லை ஐயா! என்னை நானே பரீட்சித்துப் பார்த்து, எனக்கு நானே புத்தி புகட்டிக்கொள்ளும் தினசரி பன்னிரண்டு நிமிஷம் வேலை அல்லவா இது!" என்று முடித்தார் ஸ்டாலின்.

இதுவும் ஒரு நல்ல பழக்கம்தானே?

—ச. கி. சுவாமிநாத்.

# வேலைக்காரி விசாலம்

## விந்தன்

அனந்தகிருஷ்ணனுக்கு ஐந்து வயது. ஆனாலும் செல்வத்தின் காரணமாக அவன் ரொம்ப ரொம்பச் சின்னக் குழந்தையாகவே இருந்தான். ஸ்ரீமான் ராமேஸ்வரனுக்கு அவன் ஏக புத்திரன். வழக்கம்போல் அன்றும் மாலைவேளையில் அவனைத் தள்ளு வண்டியில் உட்கார வைத்துத் தள்ளிக் கொண்டு சென்றாள் வேலைக்காரியான விசாலம்.

விசாலத்துக்கும் ஒரு குழந்தை இருந்தது. சங்கரன் என்பது அவன் நாமதேயம். அவனுக்கும் ஏறக்குறைய ஐந்து வயதுதான் இருக்கும். ஆனால் வறுமையின் காரணமாக அவன் ரொம்ப ரொம்பப் பெரிய குழந்தையாக இருந்தான். தினசரி எஜமான் வீட்டு வேலைகளைச் செய்யும் தாயாருக்கு உதவியாயிருப்பான். அம்மாவின் இடுப்புகூட அவன் சவாரி செய்வதற்குக் கிடைப்பதில்லை; அதுகூட அனந்தகிருஷ்ணனுக்குத் தான் அடிக்கடி உபயோகப்பட்டு வந்தது!

அன்று என்னவோ தெரியவில்லை—சங்கருக்குத் தானும் தள்ளு வண்டியில் ஏறிக் கொண்டு சவாரி செய்ய வேண்டுமென்று ஆசை வந்து விட்டது!

"அம்மா!"

"ஏண்டா?"

"தள்ளு வண்டி, அம்மா!"

குழந்தை தன்னுடைய நிலைமை தெரியாமல் தனக்கும் ஒரு தள்ளு வண்டி வாங்கிக் கொடுக்கச் சொல்கிறானாக்கும் என்று நினைத்துக்கொண்டு, விசாலம் சிரித்துக் கொண்டே, "ஆகட்டும்; நாளைக்கே ஒரு வண்டி வாங்கி விடலாம்; அந்த வண்டியில் உன்னை உட்கார வைத்துத் தள்ளிக்கொண்டு செல்வதற்கு ஒரு வேலைக்காரியையும் நாளைக்கே வேலைக்கு வைத்துக் கொள்ளலாம்!" என்றாள்—வாழ்க்கையில் அவ்வளவு நம்பிக்கை யற்றுப் போயிருந்தாள் அவள்.

"இல்லை, அம்மா!" என்று தன் பிரேரணையில் ஒரு சிறு திருத்தம் கொண்டு வந்தான் பையன்.

"பின் என்னடா?" என்று அதட்டினாள் தாயார்.

அன்னையின் அதட்டலைக் கேட்டதும், அஸ்தமிக்கும் ஆதவனைக் கண்ட அல்லி மலரைப் போல் குழந்தையின் வதனம் குவிந்து விட்டது.

தன் விருப்பத்தை வாய் மூலம் தெரிவிப்பதற்குக்கூட அஞ்சிய குழந்தை, ஒரு கையால் கண்ணைக் கசக்கிக் கொண்டே இன்னொரு கையால் தள்ளு வண்டியில் உட்கார்ந்திருந்த அனந்தகிருஷ்ணனைச் சுட்டிக் காட்டினான்.

அப்பொழுதும் அன்னைக்கு அர்த்தம் விளங்கவில்லை.

ஆனால் குழந்தையின் மனம் குழந்தைக்குத் தெரியுமோ என்னமோ, சங்கரின் விருப்பத்தை அனந்தகிருஷ்ணன் எப்படியோ தெரிந்துகொண்டான். உடனே வண்டியை விட்டுக் கீழே இறங்கி, "ஊம்......... ஏறிக்கோ!" என்றான்.

பரஸ்பரம் குழந்தைகள் தங்களுக்குள் இப்படி விட்டுக் கொடுத்துக் கொண்டது கூட விசாலத்துக்குப் பிடிக்கவில்லை. பிடிக்காமற் போனதோடு மட்டும் இல்லை; அவளுக்குப் பயமாயும் இருந்தது—எஜமான் பார்த்து விட்டால் என்ன ஆகும்? இந்த வேலையில்கூட மண்ணைப் போட்டுக்கொண்டு அப்புறம் எப்படிக் காலம் தள்ளுவது? இந்தச் சண்டாளன் நம்முடைய வேலைக்கு எமனா யிருப்பான் போலிருக்கிறதே!

இப்படி அவள் எண்ணிக் கொண்டிருந்ததைக் குழந்தைகள் கவனித்ததாகத் தெரியவில்லை. அனந்தகிருஷ்ணன் 'ஊம்' என்றதுதான் தாமதம்; சங்கரன் 'ஜம்' என்று வண்டிக்குள் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

விசாலம் பொறுமையை இழந்து விட்டாள். அவள் ஆத்திரத்துடன் சங்கரனைத் தூக்கிக் கீழே விட்டுவிட்டு, "அனந்த்! ஏறிக் கொள்!" என்றாள்.

"ஊஹூம்...மாட்டேன்! கொஞ்ச தூரம் நான் நடக்கத்தான் போகிறேன்!" என்று பிடிவாதம் பிடித்தான் அனந்தகிருஷ்ணன்.

சங்கரன் விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டான்.

தாய்க்குத் தர்ம சங்கடமாக இருந்தது. ஒன்றும் புரியாமல் தவித்தாள்.

அனந்தகிருஷ்ணன் அவளைக் கவனிக்கவில்லை. சங்கரனை மீண்டும் வண்டியில் ஏற்றிவிட்டு, தானே வண்டியைத் தள்ள ஆரம்பித்தான்.

'பாம்ப பாம், பாம்ப பாம்!' என்று பங்களாவுக்கு வரும் பாதையிலிருந்து மோட்டார் 'ஹாரன்' சத்தம் கேட்டது—ஆமாம்; விசாலம் எதிர்பார்த்தபடி எஜமான்தான் அந்தக் காரில் வந்து கொண்டிருந்தார்.

கதிகலங்கிப் போய் விட்டாள் விசாலம்.

கடைசியில் என்ன? — எஜமான் அந்த அநீதியை — அக்கிரமத்தைப் பார்த்தே விட்டார்! — சங்கரன் வண்டியில் ஏறிக் கொண்டிருப்பதையும், தன்னுடைய குழந்தை வண்டியைத் தள்ளிக்கொண்டு செல்வதையும்தான்!

என்ன கர்வம் இவளுக்கு! தள்ளு வண்டியில் தன் பிள்ளையை உட்கார வைத்ததோடு இல்லாமல், அனந்த கிருஷ்ணனை விட்டு அல்லவா வண்டியைத் தள்ளச் சொல்லியிருக்கிறாள்!

"எய்!"—ஆமாம்; இது எஜமானின் அதிகார பூர்வமான அழைப்பு! உழைப்பைப் பெற்றுக்கொண்டு ஊதியம் கொடுக்கும் அவனுக்கு, அவள் தன் சுயமரியாதையையும் தத்தம் செய்துவிட வேண்டும்!

விசாலத்தின் கண்கள் கலங்க ஆரம்பித்து விட்டன. கார் நிறுத்தப்பட்டது.

விசாலம் பய பக்தியுடன் வந்து நின்றாள். 'மன்னிச்சுடுங்கோ!' என்ற வார்த்தை அவள் வாயிலிருந்து ஒவ்வொரு அக்ஷரமாகத் தயங்கி தயங்கி வெளி வந்தது.

எஜமானின் விழிகள் அப்படியும் இப்படியுமாக ஒரு க்ஷணம் உருண்டன. மறு க்ஷணம் ஒரு நீண்ட பெருமூச்சு; கடைசியில் 'ஊம்' என்று ஒரு பயங்கர உறுமல்; கார் கிளம்பி விட்டது!

'அப்பாடி!' என்று விசாலம் 'விடு விடு' வென்று தள்ளு வண்டி சென்ற திக்கை நோக்கி நடந்தாள். வண்டியில் உட்கார்ந்திருந்த சங்கரனின் இரு கன்னத்திலும் இரண்டு அறை வைத்தாள். குழந்தை 'வீல்' என்று கத்தினான்; துடியாய்த் துடித்துப் போனான்; "அம்மா! அம்மா!" என்று அலறினான். ஆனாலும் அந்தச் சமயத்தில் அவள் மனம் இரங்கவில்லை — கூலிப் பிழைப்பை விடவா அந்தக் குழந்தை?

பரபரப்புடன் அனந்த கிருஷ்ணனைத் தூக்கி வண்டியில் உட்கார வைத்தாள்; பங்களாவை நோக்கி வண்டியைத் தள்ளிக் கொண்டு சென்றாள்.

குழந்தையைக் கூடக் கவனிக்காமல்தான்!

எஜமான் முன்னால் வண்டியை நிறுத்தினாள். அவர் விரைந்து வந்து அனந்த கிருஷ்ணனைத் தூக்கித் தோளின்மேல் போட்டுக்கொண்டு, "ஜாக்கிரதை! இன்னொரு முறை இம்மாதிரி செய்தாயோ, வீட்டுக்குத்தான்!" என்று எச்சரித்தார்.

இந்தச் சமயத்தில், "அவன் செய்யவில்லை, அப்பா! நானேதான் அவனை வண்டியில் உட்கார வைத்துத் தள்ளினேன்; எனக்கு அப்படிச் செய்ய வேண்டுமென்று ஆசையாயிருந்தது, அப்பா!" என்றான் அனந்தன்.

"குழந்தை! உனக்கென்ன தெரியும்? நீ செய்தால் அவன் பார்த்துக் கொண்டிருப்பதா?" என்று சொல்லிக் கொண்டே ராமேஸ்வரன் உள்ளே போய்விட்டார்.



விசாலம் திரும்பினாள். அவளுக்குப் போன உயிர் திரும்பி வந்தது போலிருந்தது. அடிக்கும் கை தானே அணைக்கவும் வேண்டும்? சாலையிலேயே நின்று அழுது கொண்டிருந்த குழந்தையை நோக்கி நடந்தாள். குழந்தையும் விக்கி விக்கி அழுது கொண்டே அவளை நோக்கி வந்து கொண்டிருந்தான். இருவரும் சந்தித்தனர் — ஐயோ!



"இன்ஸ்பெக்டர் ஐயா, அந்த மூனுசாமிப்பயல் என்னை உதைச்சுக் கொன்னும் பிடறேன்னுட்டுப் பய முறுத்துகிறான். எனக்கு ரொம்ப நடுக்கமா யிருக்கு. நீங்கள் தான் என்னை அவங்கிட்டே யிருந்து காப்பாத்தணும்."

இரண்டு கன்னத்திலும் என்ன, அத்தனை பெரிய தழும்பு?

பார்த்த மாத்திரத்தில் விசாலத்தின் வயிறு 'பகீர்' என்றது. குழந்தையை வாரி மார்புடன் அணைத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள்!

அடி பைத்தியக்காரி! உன்னை யார் அடிக்கச் சொன்னார்கள், அப்புறம் அழச் சொன்னார்கள்?

★

அன்று ஏனோ தெரியவில்லை; வீட்டுக்கு வரும்போதே ஸ்ரீமான் ராமேஸ்வரன் ஒரு மாதிரியாக வந்தார். தேள் கொட்டிய திருடனின் வேதனை அவருடைய திவ்யமான முகத்தில் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. "அடியே!" என்று தம் மனைவியைக் கூப்பிட்டுக் கொண்டே ஆயாசத்துடன் ஹாலிலேயே உட்கார்ந்து விட்டார்.

'என்னமோ, ஏதோ' என்ற பீதியுடன் அவர் மனைவி மனோன்மணி ஓடோடியும் வந்தாள்.

அவளைப் பார்த்ததும், சுகாசனத்தில் நிமிர்ந்தபடி உட்கார்ந்திருந்த ராமேஸ்வரன், "வந்துட்டாண்டி!" என்று சொல்லிக் கொண்டே பின்னால் 'தொப்'பென்று சாய்ந்தார்.

"யார் 'வந்துட்டாண்டி'?" என்று பதட்டத்துடன் கேட்டாள் மனோன்மணி.

"நம்முடைய கம்பெனிக்கு ஒரு 'அக்கௌண்டெண்ட்' தேவை என்று பத்திரிகையில் விளம்பரம் செய்திருந்தேனே, இல்லையோ—அதற்கு ஒரு 'அப்ளிகேஷன்' வந்தது. ஆசாமியை நேரில் வரச்சொல்லிக் கடிதம் எழுதச் சொன்னேன்; வந்தான். பார்த்தால் அவனே அந்த ஆசாமி!"

"ஐயோ! 'அவன், இவன்' என்று சொல்லி ஏன் என் பிராணனை வாங்குகிறீர்? ஆசாமி யார் என்று சொல்லித் தொலையுங்களேன்!" என்றாள் மனோன்மணி.

"போடி, போ! உனக்குத்தான் எல்லாம் தெரிந்த கதையாச்சே! பர்மாவிலிருந்து எவனுடைய பணத்தைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்து இங்கே இவ்வளவு அமர்க்களமா யிருக்கிறோமோ, அந்தப் பணத்துக்குச் சொந்தக்காரன் என்னிடம் 'அக்கௌண்டெண்ட்' வேலை பார்க்க வந்திருக்கிறான்!"

"நான் அப்பொழுதே சொல்லவில்லையா? எங்கேயாவது அவர் இன்னும் உயிரோடு இருந்தாலும் இருப்பார் என்று. நீங்கள் தான் அந்த மனுஷர் செத்தே போயிருப்பார் என்று ஒரேயடியாய்ச் சாதித்தீர்கள்!"

"நான் என்னத்தைக் கண்டேன்? நாம் வரும்போது நம் கண் முன்னாலேயே எத்தனையோ பேர் சாகவில்லையா? அத்தனை பேரில் அவனும் ஒருவனா யிருப்பான் என்று நான் நினைத்தேன். கடைசியில் என்னடா என்றால்......" என்று சொல்லிக் கொண்டே ராமேஸ்வரன் தம் முகவாய்க் கட்டையை அப்படியும் இப்படியுமாகத் தடவி விட்டுக் கொண்டார்.

"கடைசியில் என்னதான் ஆச்சு?"

"என்ன ஆவது? குற்றத்தை ஒப்புக் கொண்டேன். 'எல்லாம் உம்முடைய பணந்தான். சந்தர்ப்பம் உம்மிடம் பணத்தை ஒப்புவிக்க முடியாமல் செய்துவிட்டது. இப்பொழுது இந்தக் கம்பெனியை நீங்களே ஏற்றுக் கொள்ளுங்கள். நான் பழையபடி உங்களிடம் 'அக்கௌண்டெண்ட்'டாகவே இருந்து உத்தியோகம் பார்க்கிறேன்' என்று சொல்லி விட்டேன். அவரும் என்னுடைய காரியத்தைப் பெருந்தன்மை என்று மெச்சி என்னைக் கட்டித் தழுவிக் கொண்டார்!"

"நல்ல மனுஷர், பாவம்!"

"நல்ல மனுஷராவது, நல்ல மனுஷர்! இப்பொழுது வந்து நம்மைக் கெடுத்தானே, அதைச் சொல்லு!"

"போகட்டும்; அந்த மட்டுமாவது விட்டாரே!—கடவுள் கிருபை யிருந்தால் நாளைக்கே கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்து விடுகிறோம்!"

"கடவுள் கிருபையுமாச்சு, கஷ்டப்பட்டு முன்னுக்கு வருவதுமாச்சு! இந்த ஜன்மத்தில் அதெல்லாம் நடக்கிற காரியமா? — என்னமோ ஜப்பான்காரன் நமக்காகப் பெரிய மனது பண்ணி பர்மாவைத் தாக்கினான்; நமக்கும் நல்ல காலம் வந்தது; அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு வந்து இங்கே குடியும் குடித்தனமுமானோம். கொடுத்து வைக்கவில்லை, போய்விட்டது!" என்று கையை விரித்தார் ராமேஸ்வரன்.

மனோன்மணி அதற்குமேல் அவரை ஒன்றும் கேட்க விரும்பவில்லை; பேசாமல் உள்ளே போய்விட்டாள்.

*

வீட்டு முற்றத்தில் உட்கார்ந்தபடி வீதியை நோக்கிக் கொண்டிருந்தார் ராமேஸ்வரன்—தமது பழைய எஜமானரின் வரவை எதிர்பார்த்துத்தான்!

சிறிது நேரத்திற்கெல்லாம் அவரும் வந்து சேர்ந்தார். மலர்ந்த முகத்துடன் அவரைக் கைகூப்பி வரவேற்று, தமக்கு எதிரே யிருந்த ஆசனத்தில் உட்காரும்படி வேண்டிக் கொண்டார் ராமேஸ்வரன். மரியாதைக்காகத் தமக்கு முன்னால் எழுந்து நின்ற ராமேஸ்வரனை நோக்கி, "பாவாயில்லை; உட்காருங்கள்!" என்றார் வந்தவர்.

இந்தச் சமயத்தில் ஏதோ வேலையாக வெளியே போய்விட்டு வந்த விசாலம், முற்றத்தில் உட்கார்ந்திருந்த புதிய மனிதரைப் பார்த்ததும், "ஹா! நீங்களா!" என்று அலறிக் கொண்டே மின்னல் வேகத்தில் அந்த வந்த மனிதரை நோக்கிப் பாய்ந்தாள். அடுத்த நிமிஷம் அவள், அவருடைய மடியில் தலையைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதாள்!

"விசாலம்! நீயா விசாலம்! இதென்ன கோலம்? இந்தக் கோலத்தில் உன்னைப் பார்க்கவா நான் இத்தனை நாளும் உயிரை வைத்துக் கொண்டிருந்தேன்? குழந்தை எங்கே?—குழந்தை எங்கே?" என்று கண்ணீர் மல்கத் துடிதுடித்துக் கொண்டே அவளைத் தூக்கி நிறுத்தினார் சச்சிதானந்தம்.

"நான் சொன்னபடி முதலிலேயே அந்தப் பாழாய்ப் போன பர்மாவை விட்டு வெளியேறி யிருந்தால் நமக்கு இந்தக் கதி நேர்ந்திருக்குமா? 'இன்னும் என்ன ஆகிறதென்று பார்ப்போம்' என்று பணத்தை நம்பி நாளைத் தள்ளிக்கொண்டு வந்தீரே, கடைசியில் அந்தப் பணம் போன வழி நமக்குத் தெரிந்ததா? நாம் போன வழி பணத்துக்குத் தெரிந்ததா? இல்லை; நான் போன வழிதான் உமக்குத் தெரிந்ததா? நீர் போன வழிதான் எனக்குத் தெரிந்ததா?" என்று விம்மலுக்கும் விக்கலுக்கும் இடையே கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டாள் விசாலம்.

ராமேஸ்வரனுக்கு ஒன்றுமே புரியவில்லை; ஒரே வியப்பாயிருந்தது. வாயைப் பிளந்தபடி, "நம்முடைய எஜமானி யம்மாளா நமக்கு இத்தனை நாளும் வேலைக்காரியாக இருந்தாள்!" என்று எண்ணமிட்டார்.

மனோன்மணியும் இன்னதென்று சொல்ல முடியாத நிலையில் தவியாய்த் தவித்தாள்.

அடுத்த நிமிஷத்தில் தம்மை அறியாமலேயே, "சங்கர்! சங்கர்!" என்று இரைந்தார் ராமேஸ்வரன்.

எங்கேயோ விளையாடிக் கொண்டிருந்த சங்கர் ஓடோடியும் வந்தான். அவனைப் பார்த்த ராமேஸ்வரனுக்கு அப்பொழுது என்ன தோன்றிற்றோ என்னமோ, அப்படியே அவனை வாரி யெடுத்து அன்புடன் அணைத்துக் கொண்டுபோய்த் தள்ளு வண்டியில் உட்கார வைத்தார்; தாமே வண்டியைத் தள்ளிய வண்ணம் தோட்டத்தைச் சுற்றிச் சுற்றி வந்தார்!

சங்கருக்கு ஒன்றும் புரியவில்லை; திருதிருவென்று விழித்தான்—என்றும் இல்லாத திருநாளாய், கேவலம், ஒரு வேலைக்காரியின் பிள்ளையை ஆணைப்பட்ட எஜமானே வண்டியில் வைத்துத் தள்ளுவதென்றால்?



★

ஸலூன் ஒன்றின் கூரைமீது குண்டுகள் விழுந்து மேல் பக்கம் பூராவும் மொட்டையாகி விட்டது. உடனே ஸலூன்காரர் பின்வருமாறு ஒரு போர்டு எழுதி வாசலில் மாட்டி வைத்தார்:—

"என்னை மொட்டை அடித்து விட்டார்கள். உங்கள் சங்கதி என்ன?"

★

# இந்தியாவிற்கு உதவுங்கள்

## இதோ அதற்கு வழி!



பொருட்களை மிதமாகச் செலவிட்டு, அவை தாராளமாய்க் கிடைக்கும்படிச் செய்யுங்கள்.

உங்களுக்கு சொந்தமாயுள்ளவை அல்லது நீங்கள் உபயோகப் படுத்துபவை யாவற்றையும், கூடுமான காலம் உழைக்கும்படிச் செய்யுங்கள். சிக்கனமாக இருப்பது சௌகரியமட்டு மல்லாமல், நாட்டுப் பற்றுடைமையின் கடமையுமாகும். தேவைப் பொருளின் நெருக்கடியை தவிர்க்க நீங்கள் உதவினாலொழிய, இந்தியாவின் ஏழை மக்கள் கஷ்டப் படத்தான் செய்வார்கள்.

சொந்த அனுபவத்தைக் கொண்டு பார்த்தாலும் முறைப்படி சிக்கனத்தைக் கையாண்டு வந்தால் முறைப்படி சிறிது தொகை மிச்சமாகும். நீங்கள் செலவு செய்யாத ரூபாய்கள், சேமிப்பில் சேர்ந்து பெருகிவிடும்.



மின்சாரச் செலவைக் குறையுங்கள்.

**1** வேண்டாத சமயங்களில் விளக்குகளையும் விசிறிகளையும் நிறுத்தி வையுங்கள்.



**2** சொட்டிக் கொண்டிருக்கும் குழாயை நிறுத்துங்கள். அதிகப்படியான தண்ணீர் வரியை ஏன் செலுத்துகிறீர்கள்?



**3** அதிக விலையுள்ள பரிசுகள் வழங்காதீர்கள்.



**4** வீட்டில் இருப்பதன் மூலம், பயணத்தை மிச்சப் படுத்துங்கள்.



**5** பீங்கானுக்குப் பதிலாக உலோகங்களால் செய்யப்பட்ட பாத்திரங்களை உபயோகியுங்கள்



**6** ஒரு வருஷத்துக்குப் புதுத் துணி வாங்காதீர்கள்.

## இன்றியமையாதவை தவிர, பிற எதையும் வாங்காதீர்கள்.

இந்திய சர்க்கார் இ. & பி. இலாகா வெளியீடு.

# காலக்ஷேபம்

### யாருக்கு மருந்து?

டாக்டர்:—உங்கள் கணவர் இன்று ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் ஜுரம் அதிகமாய்விடும். அதற்காக இந்தத் தூக்க மருந்தைக் கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள்.

மனைவி:—இதை அவருக்கு எப்பொழுது கொடுக்க வேண்டும்?

டாக்டர்:—மருந்து அவருக்கல்ல; உங்களுக்குத்தான். —எஸ். பகவையா.

★

### இரண்டு பொய்யர்கள்

சோல்ஜர் (இராணுவ அதிகாரியிடம்):— என் மனைவியிடம் இருந்து எனக்கு லெட்டர் வந்திருக்கிறது. அவள் இறக்கும் தருவாயில் இருக்கிறளாம். எனக்கு ஒரு வார லீவு வேண்டும்.

இராணுவ அதிகாரி (சோல்ஜரிடம்):— என்ன பொய் சொல்கிறே? உன் மனைவியிடமிருந்து எனக்கு இப்பொழுதுதான் ஒரு லெட்டர் வந்தது. உனக்கு லீவு கொடுக்க வேண்டாம் என்றும் நீ லீவில் போகும் பொழுதெல்லாம் அவளுடன் சண்டை போடுகிறாய் என்றும் எழுதியிருக்கிறளே!

சோல்ஜர் (மெதுவான குரலில்):—ஸார்! இந்த ரெஜிமெண்டில் இரண்டு பொய்யர்கள் இருக்கிறார்கள். ஏனென்றால் எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லை.

—எஸ். பாண்டிப் பெருமாள்.

★

### எத்தனை பேர்?

"உங்கள் ஆபீஸில் எத்தனை பேர் வேலை செய்கிறார்கள்?"

"கிட்டத் தட்டப் பாதிப் பேர் வேலை செய்கிறார்கள்!" —லக்ஷ்மணன்.

### கன்று யாருடையது?

பெரியவர் (எதிர் தெருவில் கன்றுக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்த பசுவைக் காட்டி ஒரு சிறுவனிடம்):—தம்பி, இது யாருடைய பசு?

சிறுவன்:—பசு யாருடையது என்று தெரியாது. ஆனால் கன்று யாருடையது என்று தெரியும்.

பெரியவர்:—அதைத்தான் சொல்லேன்?

சிறுவன்:—கன்று அந்தப் பசுவினுடையதுதான்! —கே. எஸ். மயிலையா.

★

### யோசனை!

பிரசங்கி:—மகாஜனங்களே! நான் சொல்ல விரும்பும் விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன; ஆனால் எனக்கு இருக்கும் அவகாசமோ பத்து நிமிஷம்தான். எங்கே இருந்து ஆரம்பிப்பது என்று தெரியவில்லை.

கூட்டத்தில் ஒருவர்:—ஒன்பதாவது நிமிஷத்திலிருந்து ஆரம்பியுங்களேன்!

—வி. முத்துசாமி.

★

### காரணம்!

"அதோ போகிறாளே, அந்த அம்மாளுக்காகத்தான் இன்று மழை பெய்கிறதாக்கும்!"

"ஏ, அப்பா! அப்பேர்ப்பட்ட புண்ணியவதியா அவள்?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இன்று வடாம் பிழியப் போகிறதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்!" —மைத்ரேயா.

★

### தெரிந்த விஷயம்

ஜோஸியர்:—இந்த ஜாதகன் நாற்காலியில் உட்கார்ந்து காலை ஆட்டிக் கொண்டிருந்தாலே போதும்; ஜீவனத்தைப் பற்றிக் கவலையே யில்லை.

கேட்க வந்தவர்:—அதுதான் தெரிந்திருக்குதுங்களே, நான்தான் 'டெய்லர்' ஆச்சே! —ஆ. மா. கோவிந்தசுவாமி.

---

*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எஸ். வி. சரஸ்வதி c/o எஸ். ஆர். சந்திரசேகரன், காரை மங்கலம், சேலம் ஜில்லா.*

# பட்டம் வேண்டுமா?



செல்லம்

காட்டில் ஒரே குழப்பம். திடீரென்று "சிங்கக்குட்டி எங்கே? பட்டம் கட்ட வேண்டும்" என்று மிருக ராஜனின் குரல் கேட்டது. இந்த இருட்டில்தான் பட்டம் கட்டுவார்களோ என்று எல்லா மிருகக் குழந்தைகளும் கைதட்டிச் சிரித்தன. சிங்க ராஜகுமாரனுக்கு வெட்கமாய்ப் போய்விட்டது. இருந்தாலும் ராஜகுமாரனல்லவா? இந்த மிருகக் குட்டிகளுக்குப் பயந்தால் எப்படி நாளைக்குப் பட்டங் கட்டிக் கொண்டு ஒரு குடையின் கீழ் இவ்வளவு மிருகங்களையும் ஆளுவது என்று பெருமையுடன் ராஜ நடை போட்டுக்கொண்டு அரண்மனைக்குள் சென்றது.

பட்டத்துத் திருநாளைப் பார்க்க யானைக்குட்டி முதலிய மிருகக் குட்டிகளெல்லாம் ஓடி வந்தன. சாஸ்திரியார் கரடி கையில் கட்டுத் தர்ப்பையுடன் வந்து உட்கார்ந்திருந்தார். சிங்க ராஜ குமாரனைக் கிழக்கு முகமாக உட்கார வைத்து ஏதோ மந்திரத்தை முணுமுணுத்தார் கரடியார். சிங்க ராஜகுமாரனும் "எனக்கு இளவரசுப் பட்டம் கட்டப் போகிறார்கள். நான் இன்றையிலிருந்து இந்த மிருகக் குட்டிகளுக்கு ராஜா. நான் சொன்னபடி இந்த மிருகக் குட்டிகள் கேட்காவிட்டால் காட்டை விட்டே நாட்டிற்குத் துரத்தி விடுவேன்" என்று தன் மந்திரியார் புலிக் குட்டியிடம் பெருமையாய்ச் சொல்லியது.

"இதைக் குழந்தை தலையில் கட்டுங்கள்!" என்று சாஸ்திரியார் கரடி சொல்லியவுடன், எல்லா மிருகக் குழந்தைகளும் வாழ்த்துக் கூறுவதற்குத் தயாராய் இருப்பது போல் கையைத் தூக்கின. இந்தச் சமயம் பார்த்துப் பூனைக்குட்டி நரிக்குட்டியை இழுத்துக் கொண்டு குறுக்கே ஓடி வந்தது. "இந்த இருட்டில் கூட விளக்கு இல்லாமல் நரிக் குட்டியைக் கண்டு பிடித்து விட்டேன்" என்று தன் சாமர்த்தியத்தைப் பற்றி எல்லாரிடமும் பெருமை பேச ஆரம்பித்தது பூனைக்குட்டி. "இந்தச் சனியன் பிடித்த பூனைக்குட்டி எங்கே சமயத்தில் வந்து தொலைந்தது? பட்டங் கட்டும் சமயத்திலா பூனை குறுக்கிட வேண்டும்?" என்று எல்லா மிருகக் குட்டிகளுக்கும் ஆத்திரமாய் வந்தது.

"பூ! இதற்குத்தானா? இத்தனை அமர்க்களம்! ஏதோ ஒரு பெரிய ராஜா பட்டமாக்கும் என்று எண்ணினேன். ஒரு காய்ந்த ஓலைக்கா இவ்வளவு ஆர்ப்பாட்டம்?" என்றது நரிக்குட்டி.

"கிரகண புண்யகாலே, சுப நட்சத்திர, சுப யோக" என்று சொல்லிக் கொண்டே தட்டில் இருந்த தேங்காய், பழம், வெற்றிலைப் பாக்கை எடுத்துக் கொண்டிருந்தது கரடி சாஸ்திரியார். சிங்க ராஜகுமாரனின் நட்சத்திரத்தில் சந்திர கிரகணம் பிடித்ததால் அதற்குப் பரிகாரமாக சிங்க ராஜ குமாரனுக்கு பனை ஓலைப் பட்டம் கட்டப்பட்டது. விஷயம் தெரிந்ததும் எல்லா மிருகக் குழந்தைகளும் தலைகால் தெரியாமல் துள்ளிக் குதித்தன. ஒன்றிற்காவது மிருகேந்திரன் இருக்கிறதே. நம்மை இரையாகச் சாப்பிட்டு விட்டால் என்ன செய்வது என்ற பயம் கொஞ்சங்கூட இல்லை, ஏனென்றால் கிரகண புண்ய காலத்தில் ஒருவரும் சாப்பிட மாட்டார்கள். வயிற்றில் ஆகாரம் இருந்தால் கிரகண பீடை பீடிக்கும் என்று எல்லா மிருகங்களுக்கும் தெரியும். "நான் எல்லோருடைய வீட்டிற்கும் போகவேண்டும். ஆகையால் நாளைக் காலையில் ஜாக்கிரதையாய்த் தட்சணையுடன் பட்டத்தைத் திருப்

பிக் கொடுங்கள்" என்று கூறி விட்டுக் கரடி சாஸ்திரியார் கிளம்பி விட்டார்.

கிரகணம் முடிந்தவுடன் மிருகக் குழந்தைகளும் வெளியில் ஆவலாய் ஓடி வந்து விளையாட ஆரம்பித்தன. ஒவ்வொரு குழந்தையாகச் சிங்கக் குட்டியின் பட்டத்தைத் தொட்டுப் பார்க்க ஆரம்பித்தன. காற்று வீசியதால் சிங்கக் குட்டியின் பட்டம் பறந்து போய்விட்டது. மறுநாள் தூங்கி எழுந்ததும் கரடி சாஸ்திரியார் வந்து நின்றார் ஜாம்பவான் மாதிரி. சிங்கக் குட்டிக்கோ "பட்டம் பறந்துபோய் விட்டது" என்று சொல்லப் பயம். கரடியார் "எங்கே பட்டம்? எங்கே பட்டம்?" என்று கரடியாகக் கத்திற்று. பட்டம் பறந்தே போய் விட்டது. எங்கேயாவது மரத்தில் தொத்திக்கொண்டிருக்கும் என்றது ஒரு குரங்கு.

கரடியார் "மிருகங்களுக்கே பட்டம் நிலைக்காது" என்று சாபம் கொடுத்தது. ஆகையினால் மிருகேந்திரன் தான் காட்டு மிருகங்களுக்கு ராஜா என்று கூறப்பட்ட போதிலும், பட்டமில்லை என்ற காரணத்தினால் பகலில் பதுங்கிப் பதுங்கித் திரிகிறது.

# வான சஞ்சாரம்

இசைத்தேவி

சென்னையிலும் திருச்சியிலும் குறிப்பிட்ட இரண்டு பிரபல வித்வான்களின் முழுக் கச்சேரிகள் நடவாதிருந்தது சற்று ஏமாற்றத்தைக் கொடுத்த போதிலும் அவைகளுக்குப் பதிலாக அமைந்த இரண்டும் சமாதானத்தை அளித்தன.

14உ. சென்னையில் தண்டபாணி தேசிகருக்குப் பதிலாக எஸ். வி. பார்த்தசாரதி சக்கைப் போடு போட்டார். நாளுக்கு நாள் இவர் சங்கீதம் மேன்மேலும் சோபை அடைந்து வருகிறது. அன்று கல்யாணி, வஸந்தா, பைரவி ராகங்களோடு இறுதியில் கேட்ட ராகமாலிகையும் வனப்பாயிருந்தது. உருப்படிகளில் நிரவல் ஸ்வரங்களைச் சரமாரியாய்ப் பொழிந்தார். வஸந்தா கிருதியிலும் அதன் ஸ்வரத்திலும் பிரமிக்கும்படி வாயு வேக மனோ வேகமாய்ப் பறந்தார். பக்க வாத்தியங்களுக்கு ஓரே கொண்டாட்டம். சேதுராமய்யா, வயலினில் பாடகருக்கு மேல் ஓடினார். எஸ். வி. எஸ். நாராயணனின் மிருதங்கமும், வில்வாத்ரி அய்யரின் கடமும் கடுகு வெடித்தன. இந்தக் கச்சேரியில் கேட்ட 'அந்தருணம்' என்ற பைரவி உருப்படி ஒரே வாரத்தில் நான்கு கச்சேரிகளில் வராதபடி புரோகிராம் தயாரிக்க முடியாதா என்பது பற்றி நிலையத்தார் யோசிக்க வில்லை போலும்!

16உ. திருச்சியில் தஞ்சாவூர் நாராயணசாமி பிள்ளையின் ஸ்தானத்தில் டி. வி. நமசிவாயம் பிளே போடு போட்டார். தனிப்பட்ட பாணி யில்லாவிடினும் பாடியதெல்லாம் தெளிவாயிருந்தது. ராகங்களில் தோடி விஸ்தாரமாயும் சிறப்பாயுமிருந்தது. கோகிலா திலகமென்ற அபூர்வ ராகத்தை ஆலாபனை செய்தது மெச்சத் தக்கது. சுத்ததன்யாசி, கீரவாணி ராகங்களும் கடைசியில் பாடிய அருட்பா ராகமாலிகையும் கேட்கத் தகுந்தவை. 'பிருந்தாவன லோல' கிருதியில் நிரவல் ஸ்வரப்ரஸ்தாரங்கள் பிரமாதமாயிருந்தன.

15உ. திருச்சியில் கோட்டு வாத்யத்தில் முழு நேரக் கச்சேரி செய்த கே. சாவித்திரியம்மாள் கொஞ்ச காலமாக பிரபல்யமடைந்து வருபவர். ராகங்களையும் உருப்படிகளையும் ஒழுங்காயும் சௌக்யமாயும் கையாண்டார். மாயாமாளவகௌளை, தோடி ராகங்கள் அழகாயிருந்தன. 'அந்தருணம்' உருப்படி இவர் புரோகிராமிலும் கேட்டது.

அன்று சென்னையில் பாடிய ராமநாதபுரம் வி. கிருஷ்ணன் ஞானபாவம் உடையவர். அன்று தொண்டை சற்று கட்டியிருந்தது போலும். ஆயினும் ஜனரஞ்சனி, கல்யாணி, கௌரிமனோஹரி, கமாஸ் என்ற ராகங்களையும் அவைகளின் உருப்படிகளையும் நன்றாகச் சமாளித்தார்.

11உ. திருச்சியில் சிதம்பரம் எஸ். செல்வரத்னம் பிள்ளை ஆபோகி, தோடி, கல்யாணி இவைகளோடு, ஸாரங்கி, ஹேமவதி என்ற அபூர்வ ராகங்களையும் கையாண்டிருந்தது அவர் ஞானம் வெளிப்பட்ட போதிலும், ஆசிரியர் மாணவருக்குப் பாடம் சொல்லுவது போல், சந்தம் சந்தமாய் வார்த்தைகளைப் பிரித்து வாசகமாய் வழங்கியது விசித்திரமாயிருந்தது.

12உ. திருச்சியில் ஹம்ஸவல்லியும், சென்னையில் மணக்கால் வரதராஜனும் செய்த கச்சேரிகள் கேட்கத் தகுந்தவை. முதலவர் இனிய குரலில் பாவப் பெருக்குடனும் விறுவிறுப்புடனும் ராகங்களையும் கிருதிகளையும் வழங்கினார். ராமப்ரியாவைத் திறம்படக் கையாண்டார். 'அந்தருணம்' உருப்படி இவர் புரோகிராமிலும் கேட்டது.

மணக்கால் சகோதரர் என்றாலே, கனக லிங்கம் பிச்சை மணி என்று நினைப்பது சகஜம். வரதராஜனிடம் மத்யமகால விறுவிறுப்புடன் இடையிடையே குளிர்ந்த கார்வைகளும் நாஸுக்கும் தென்பட்டன. கல்யாணி ராகமும் 'ஏதாவுனரா' கிருதியும் அழகாய்த்தான் இருந்தன. நாதநாமக்கிரியா அவர் வழிக்கு அவ்வளவு பொருந்தியதாகத் தோன்றவில்லை.

14உ. சென்னையில் கேட்ட எஸ். பி. ஹம்ஸா தமயந்தியின் கச்சேரியும் கேட்க வேண்டியவைகளில் ஒன்று. பாணியாய்ப் பதங்கள் பாடுவதில் விசேஷத் தேர்ச்சி பெற்றவர். அன்று 'பையரதா' பதம் பாவப் பொழிவுடன் விளங்கியது. அவரும் 'அந்தருணம்' உருப்படியை வழங்கினார்.



# "மஞ்சள் பூசா மேனி மங்கும்"

பழங்காலத்து ஸமாசாரம் அது. இப்போதோ எழில் வாய்க்க இன்னும் உறுதியான வழி உள்ளது.

பண்டு பண்டையிலிருந்தே தலைமுறை தலைமுறையாக பற்பல விசித்திரமான சௌந்தரிய முறைகள் பழக்க வழக்கத்தில் ஏற்பட்டுள்ளன. அதுகள் ஓரளவு கற்றறிவு - ஓரளவு கற்பிதம் - ஆகவே, பூர்ண பலன் அளித்து வரவில்லை. இக்காலத்தெல்லாம் நமக்காக அதியாச்சரியமான ரசாயன சாலைகளில் எத்தனையோ மேதாவிகளான விஞ்ஞானிகள் ஆரோக்கியத்தின் நுட்பங்களையும் அழகின் ரகசியங்களையும் கூர்ந்து ஆராய்ந்து வருகின்றனர். நற்பயனாக விளைந்தவையே பாண்ட்ஸ் க்ரீம்கள்: மங்கையர் எழிலுக்கு விஞ்ஞான ஆராய்ச்சியின்படி ஏதேது இன்றியமையாததோ அந்த அம்சங்களெல்லாம் இந்த க்ரீம்களில் உள்ளன. உபயோகித்துப் பாருங்கள். உங்களுக்கே உண்மை விளங்கும்.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** காலையிலும் மாலையிலும் முகத்தில் மெதுவாகத் தடவி, சொற்ப நிமிஷங்கள் அப்படியே வைத்திருந்து, பின்பு அழித்துக் களையுங்கள். அது மயிர்க் கண்களினூடே சென்று அங்குள்ள எண்ணெய் அழுக்குகளை கரைத்து போக்கி விடுவதோடு சருமத்திற்கு அவசியமான வளப்பத்தையும் அளிக்கிறது.

**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** எண்ணெய்ப் பொருள்கள் இல்லாததாகையால் பகல் நேரத்தில் தாராளமாய் உபயோகிக்கலாம். அது சருமத்திற்கு மேன்மை கொடுத்து வெயில், காற்று முதலியவற்றிலிருந்து பாதுகாக்கிறது.



# பாண்ட்ஸ் க்ரீம்

P. 2827 P




# கம்பர் தரும் காட்சி



## 107. கழுகா இது!

ஒரு பெரிய கருங்கல் மலைமேல், கழுகுகளுக்கு அரசனான ஜடாயு இருந்தான். பொன் மயமான மேரு கிரியைப் போலவே இருந்தான். அவனுடைய சிறு கண்கள் காத தூரம் எட்டிப் பார்க்கக் கூடியவைகளாய் இருந்தன. அலகோ மிக்க உறுதியாயும் தடித்தும் ஒரு பாகத்திற்கு மேல் நீண்டும் இருந்தது.

இந்தக் கழுகுக்குக் கழுத்தில் ஒரு ஆரம் கிடந்தது: நவக்கிரகங்கள் மனித வாழ்க்கையை ஆளுகிறது என்கிறோம். அவைகளின் சக்தியைத் திருமாலது சக்ராயுதத்தின் சக்திக்குத்தான் ஒப்பிட்டுச் சொல்லலாம். ஜடாயுவின் கழுத்திலிருந்த ரத்ன ஆரங்களை நவக்கிரகங்களுக்கு ஒப்பிட்டுச் சொன்னால் தான் பொருந்தும்.

கோள் இரு நாலினோ(டு)
ஒன்று கூடின
ஆளுறு திகிரிபோல்
ஆரத் தான்தனை ;
நீளுறு மேருவின்
நெற்றி முற்றிய
வான் இர வியில்பொலி
மௌலி யான்தனை.

[கோள் இரு நாலினோடு ஒன்று கூடின: கிரகங்கள் ஒன்பதும் ஒன்று சேர்ந்து வட்டமிட்டு: ஆளுறு திகிரிபோல்: சகல புவனங்களையும் ஆளுகிற சக்ராயுதம்போல் பிரகாசிக்கும்: ஆரத்தான் தனை: ஆரம் அணிந்தவனை; நீளுறு மேருவின் நெற்றி முற்றிய: நீண்டு உயர்ந்த மேருமலையின் உச்சியோடு பொருந்திய; வான் இரவியில் பொலி மௌலியான் தனை: மிகுந்த ஒளியோடு கூடிய சூரியன்தான் என்று சொல்லும்படியான கிரீடத்தைத் தாங்கியவனை.]

ஜடாயுவின் உருவம், ஆபரணம் கிரீடம் ஆகியவைகளைப் பார்த்தோம். இனி அவனுடைய வரலாற்றைப் பார்க்கலாம்.

ஜடாயுவின் புகழ் என்றால் — பாஷையே பேச முடியாமல் அவமானப் படும்படி அவ்வளவு பெரிய புகழ். அவனுடைய தந்தையோ — உலகத்தையே மூடியுள்ள இருளானது யாரைக் கண்டு அழிந்து விடுமோ அந்த அருணன் தான். (அருணன் சூரியனுடைய தேர்ப் பாகன்.)

சொற்பங்கம் உறநிமிர்
இசையின் சும்மையை,
அற்பங்கம் உறவரும்
அருணன் செம்மலை,
சிற்பங்கொள் பகல்எனக்
கடிது சென்றுநீர்
கற்பங்கள் பலப்பல
கண்டு ளான்தனை.

[சொல் பங்கம் உற: பாஷையானது பழுது பட்டுப் போகும்படி; நிமிர் இசையின் சும்மையை: வளர்ந்து கொண்டே போகும் கீர்த்தியாகிய பெரும் பாரத்தை (ஜடாயுவை); அல் பங்கம் உற: உலகத்தை

---

கறுப்பு மார்க்கெட்டில் பணம் சம்பாதித்துத் திடீர்ப் பணக்காரர் ஆன ஒருவர் தம் காரியதரிசியுடன் ஒரு கண் காட்சிச் சாலைக்குள் நுழைந்தார். பணக்காரர் வாயில் சிகரெட்டைக் கண்டதும் அங்கிருந்த ஆள், "சிகரெட் பிடிக்கக்கூடாது. மீறி நடப்பவர்களுக்கு ஐந்து ரூபாய் அபராதம்" என்று எழுதப் பட்டிருந்த போர்டை அவருக்குக் காட்டினான். அபராதத்தைச் செலுத்துவதற்காக அந்தப் பணக்காரர் ஒரு பத்து ரூபாய் நோட்டை அந்த ஆளிடம் கொடுத்தார்.

"சில்லறை இல்லையே" என்றான் அந்த ஆள்.

உடனே பணக்காரர் தம் சட்டைப் பையில் திரும்பவும் கையைப் போட்டு ஒரு சிகரெட்டை எடுத்துத் தம் காரியதரிசியிடம் கொடுத்து "நீரும் ஒரு சிகரெட் குடியும்" என்றார்.



மூடிய இருள் தோற்று ஓடுவதற்கு ஏதுவான; அருணன் செம்மலை: சூரியனது தேர்ப்பாகனான அருணன் பெற்ற பிள்ளையை (ஜடாயுவைத்தான்); வெப்பங்கொள் பகல் என: குறுகிய அளவு கொண்ட ஒரு நாளைப்போல; கடிது சென்ற நீர்: வேகமாய்க் கழிந்து போகிற; கற்பங்கள் பலப்பல கண்டுளான் தனை: எத்தனையோ யுகங்களை வாழ்ந்து கழித்த ஜடாயுவை — ஜடாயுவின் ஆயுள் நாளில் ஒரு யுகம் என்பது நமக்குள்ள ஒரு நாள்தான். அப்படியானால் அவனுடைய ஆயுள் எத்தனை யுகங்களைக் கண்டிருக்கும்!]

குறிப்பு :— செய்யுளிலுள்ள அபூர்வமான ஓசைகள் காலத்தின் நெடுமையை அதிசய பாவத்தில் வைத்து எடுத்துக் காட்டுகின்றன அல்லவா?

சமீபத்திலிருந்து பார்த்தால் ஜடாயு இருந்த மலை அவனது பளுவைத் தாங்க முடியாமல் அழுந்துவது போலத் தோன்றும். பூமியும் அந்த மலையோடு கீழே தாழ்ந்துகொண்டிருப்பதாகவே தோன்றும். உள்ளத்தின் மலைப்பினால் ஏற்படும் தோற்றந்தான் அது.

ஓங்குயர் நெடுவரை
ஒன்றி நின்றது
தாங்கல(து): இருநிலம்
தாழ்ந்து தாழ்வுற

வீங்கிய வலியினில்
இருந்த வீரனை, —
ஆங்கவர் அணுகினர்,
அயிர்க்கும் சிந்தையார்.

[ஓங்குயர் நெடுவரை: மிகவும் ஓங்கி உயர்ந்து நின்ற மலை; ஒன்றி நின்றது: அதாவது ஜடாயு தங்கியிருந்த மலை; தாங்கலது: தாங்க முடியாமலிருந்தது; இரு நிலம் தாழ்ந்து தாழ்வுற: மலையின் பக்கத்திலுள்ள பரந்த நிலமெல்லாம் அப்படியே கீழ்நோக்கிப் போவதாகத் தோன்ற; வீங்கிய வலியினில் இருந்த வீரனை: அவ்வளவு பளுவோடு இருந்த வீரனை — ஜடாயுவை; ஆங்கு அவர் அணுகினர்: அந்த இடத்தில் வந்து கிட்டினார்கள்; அயிர்க்கும் சிந்தையார்: தூரத்தில் வரும்போதே திகைப்போடு வந்த ராம லக்ஷ்மணர்.]

கவிஞர் ராமன் லக்ஷ்மணன் சீதை மூவரையும் ஏகாந்தமான மனுஷ சஞ்சாரமற்ற மலைப் பிரதேசத்தில் நிற்கச் செய்கிறார். நம்மையுந்தான் நிற்கச் செய்கிறார். ஒரு பயங்கர உணர்ச்சி நமக்கு உண்டாகிறது. அந்த உணர்ச்சியோடு பிரம்மாண்டமான ஒரு கழுகை ஒரு மலைச் சிகரத்தில் வைத்துக் காட்டுகிறார். ஒரே திகைப்புத்தான்!

# படித்துப் பார்!

## துர்லக்

[ஆசிரியர்: ஹிரண்மய கோஷால்; தமிழாக்கியவர்: த. நா. குமாரஸ்வாமி; பிரசுரம்: ஜோதி நிலையம், திருவல்லிக்கேணி, சென்னை; விலை: அணா 6—8—0.]

ஜோதி நிலையத்தார் வெளியிட்டு வரும் சர்வதேசக் கதை மணிகளில் இது பத்தாவது புத்தகம். படிப்பதற்கு ரஸமாயிருக்கிறது. பத்தாவது பக்கத்தில் 'பாவியே' என்கிற ஒரு வார்த்தையை உபயோகித்திருக்கிறது. அந்தப் பக்கத்துக்கு அடியில், "பாவியே— ஐயா என்று பொருள் படும் விளிச் சொல்" என்று ஒரு குறிப்பும் கொடுத்து விட்டு, அப்புறம் புத்தகம் முடியும் வரையில் 'ஐயா' என்பதற்கும் பதிலாகப் 'பாவியே' என்ற வார்த்தையையே உபயோகப் படுத்தப் பட்டிருக்கிறது. இந்தக் கஷ்டம் என்னத்திற்கு என்று நமக்கு விளங்கவில்லை.

## பூங்கொடி

[ஆசிரியர்கள்: ஆர். திருஞான சம்பந்தம், கே. விஜயராகவன்; பிரசுரம்: புதுமலர் நிலையம், கோயமுத்தூர்; விலை: ரூ. 2.]

காதலை அடிப்படையாகக் கொண்ட பதின்மூன்று கதைகள் அடங்கியுள்ளன இந்நூலில். அனேகமாக எல்லாக் கதைகளின் பின்னணியும் கிராம வாழ்க்கைதான். இந்நூலைப் படிக்கும்பொழுது இரண்டு ஆசிரியர்கள் சேர்ந்து எழுதிய நூலாகவே தோன்றவில்லை. தமிழ் நடையில் அவ்வளவு ஒற்றுமை இருக்கிறது. இளமையின் செழிப்பையும் புதுமையின் பூரிப்பையும் கொண்டு இன்பம் பூத்துக் குலுங்கும் இக்கதைப் பூங்கொடியில் எந்தப் பூ சிறந்ததென்று கூற முடியவில்லை.

## வாழ்க்கைத் தோணி

[ஆசிரியர்: ஸ்ரீ க. நாராயணன்; பிரசுரம்: தாய்நாடு பதிப்பகம், புதுக்கோட்டை; விலை: ரூ. 1—4—0.]

உண்மை இனிக்குமா? இனிக்காது; கசக்கும். இதற்காகவே சில எழுத்தாளர்கள் தங்கள் கற்பனையிலும் கூடக் கசக்கும் உண்மையைச் சொல்ல அஞ்சுகிறார்கள். ஆசிரியர் ஸ்ரீ க. நாராயணன் அப்படி அஞ்சவில்லை. வாழ்க்கையில் இடம் கிடைக்காதவர்கள் படும் பாட்டை உள்ளது உள்ளபடி எடுத்துக் காட்டியிருக்கிறார். உண்மை கசக்குமென்றாலும் ஆசிரியரின் தென்றல் போன்ற சிலுசிலுப்பான நடையிலே இனிக்கத்தான் இனிக்கிறது.

## பிழையின்றிப் பேசுக

[ஆசிரியர்: வ. சுப்பையா; பிரசுரம்: தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை; விலை அணா 4.]

இளசர் வாழ்க்கையிலே நாம் தப்புந் தவறுமாய்ப் பேசும் பல வார்த்தைகளைத் திருத்தமாய்ப் பிழையில்லாமல் பேசுவதற்கும் எழுதுவதற்கும் இந்நூல் உதவி செய்யும்.

நாடோடி

# தீக்ஷிதர் திட்டம்

[ குறிப்பு :—இக்கதை சம்பந்தப்பட்ட மட்டில் தீக்ஷிதர் என்பது ராமசாமி தீக்ஷிதரையும், சர்மா என்பது கிருஷ்ணசாமி சர்மாவையும் குறிக்கும்.]

தீக்ஷிதருக்கும், சர்மாவுக்கும் உள்ள அரசியல் அனுபவம் நம் நாட்டில் வேறு யாருக்காவது உண்டா என்பது சந்தேகம்தான். அரசியல் உலகிலே யார் எந்தத் துரும்பைத் தூக்கி எந்தப் பக்கம் போட்டாலும் சரி, அதைப் பற்றி உடனே இவர்கள் இரண்டு பேர் அபிப்பிராயமும் அறிக்கையாக வெளிவரா விட்டால் அந்தத் துரும்பு தூக்கிப் போடப்பட்டதாகவே அரசியல் விவகாரம் தெரிந்த யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

அதிலும் அறிக்கைகள் விடுவதில் இந்த இரண்டு பேருக்குமிருந்த போட்டி சொல்லி முடியாது. தீக்ஷிதர் ஒரு முழு நீள அறிக்கை விட்டாரென்றால் உடனே சர்மா அதைப் பற்றி இரண்டு முழு நீள அறிக்கை விடுவார். உடனே தீக்ஷிதர் இதைப் பற்றி மூன்று முழு நீள அறிக்கை விடுவார். இப்படியாக இரண்டு பேர் அறிக்கைகளும் அனுமார் வால் போல் நீண்டு கொண்டே போகும். ஒவ்வொரு சமயம் எந்த விஷயத்தைப் பற்றிச் சர்ச்சை ஆரம்பித்தது என்பதுகூட மறந்து போகும். ஆனால் அறிக்கைகளோ என்றால் மாறி, மாறி வெளி வந்து கொண்டிருக்கும்.

ஒரு சமயம் தீக்ஷிதரும், சர்மாவும் சந்திக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது. கல்யாண வயதில் தீக்ஷிதருக்கு ஒரு பையனும், சர்மாவுக்கு ஒரு பெண்ணும் இருந்ததுதான் இந்த நிலைமைக்குக் காரணம்.

சாதாரணமாக அரசியல் வாழ்க்கையில் அதிகமாக ஈடுபடாத நம் போன்றவர்களாயிருந்தால் என்ன பண்ணுவோம்? எல்லாரையும் வைத்துக் கொண்டு லௌகிக விஷயங்களைப் பற்றிப் பேசுவோம். ஒத்துப் போனால் உடனே கல்யாணத்துக்குத் தேதி நிச்சயம் பண்ணுவோம். இல்லாவிடில் மூட்டையைக் கட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்புவோம்.

ஆனால் தீக்ஷிதரும், சர்மாவும் நம் போன்ற சாதாரண மனிதர்கள்போல் நடப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா?

தீக்ஷிதர் வீட்டுக்காரர்கள் என்னமோ அப்படித்தான் எதிர்பார்த்து ஏமாந்து போனார்கள். தம் பிள்ளைக்கு இன்ன வரதக்ஷிணை வேண்டும் என்று தீக்ஷிதர் சர்மாவைக் கேட்பார், சர்மா அதற்கு ஒப்புக் கொள்வார், உடனே கல்யாணம் நிச்சயமாகி விடும் என்று நினைத்தார்கள்.

உண்மையில் நடந்தது என்னவென்றால், தீக்ஷிதர் சர்மாவைப் பார்த்து, "இது விஷயமாக நான் ஒரு திட்டம் தயாரித்து வைத்திருக்கிறேன். அதற்குத் தீக்ஷிதர் திட்டம் என்று பெயர். தாங்கள் சம்மதப்படும் பட்சத்தில் நாமிருவரும் அதை விவாதிக்கலாம்" என்றார்.

சர்மா, "ஆஹா! அதற்கென்ன? இப்படிக் கூடத்திலேயே விவாதிக்கலாமா?" என்று கேட்டார்.

"ஊஹூம். கூடாது. காரியம் கெட்டு விடும். அதோ அந்தத் திண்ணை அறைதான் வசதியான இடம்! அங்கே போய்ப் பேசலாம்" என்றார் தீக்ஷிதர்.

அப்படியே இரண்டு பேரும் திண்ணை அறைக்குள் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு பேசத் தொடங்கினர். கூடத்தில் கூடியிருந்த பெண்டுகள் வெகு ஆவலாக என்ன முடிவு ஏற்படுகிறதோ என்று வெகு நேரம் காத்திருந்தனர்.

இரண்டு மணி நாற்பத்தாறு நிமிஷ காலத்துக்குப் பிறகு திண்ணை அறைக் கதவு திறந்தது. உள்ளேயிருந்து தீக்ஷிதரும், சர்மாவும் வெளியே வந்தனர். இரண்டு பேர் முகத்திலும் சந்தோஷக் குறிகள் தென்பட்டன.

கூடத்திலிருந்த எல்லாரும், என்ன தீர்மானம் ஆயிற்று என்று வெகு ஆவலாய்

விசாரித்தார்கள். ஆனால் இரண்டு பேரும் பதில் சொல்ல மறுத்து விட்டனர். "நாளைக்கு இதே சமயம், இதே திண்ணை அறையில் நாங்கள் இருவரும் திரும்பவும் சந்தித்துப் பேசப் போகிறோம். அவ்வளவுதான் சொல்ல முடியும்" என்று பதில் கூறினர்.



அடுத்த நாள் குறிப்பிட்ட மணிக்கு, திண்ணை அறைப் பேச்சுக்கள் ஆரம்பம் ஆகின. ஆனால் அன்று கதவு கால் மணி நேரத்திலேயே திறந்து விட்டது. வெளியே வந்த தீக்ஷிதர் முகத்திலும், சர்மா முகத்திலும் முதல் நாள் காணப்பட்ட குஷி காணப்படவில்லை. விஷயம் என்னவென்று விசாரித்ததற்கு "இப்பொழுது ஒன்றும் சொல்வதற்கில்லை" என்று தீக்ஷிதர் கையை விரித்து விட்டார். சர்மாவோ ஏதோ ஒரு சமஸ்கிருத சுலோகத்தை ஒப்பித்தார். சுலோகத்தின் அர்த்தம் என்ன என்று சமஸ்கிருதம் தெரிந்தவர்களை விசாரித்ததில், "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்றார்கள்.

அதற்கடுத்த இரண்டு நாட்களும் சர்மாவும், தீக்ஷிதரும் ஒருவரை யொருவர் சந்திக்கவே யில்லை. இரண்டாம் நாள் மாத்திரம் சர்மாவிடமிருந்து தீக்ஷிதருக்கு சீல் வைத்த கடிதம் ஒன்று வந்து சேர்ந்தது. உடனேயே தீக்ஷிதரிடமிருந்து சர்மாவுக்கு ஒரு சீல் வைக்காத கடிதம் போய்ச் சேர்ந்தது.

மூன்றாம் நாள் மாலை மூன்று மணி இருக்கும். தீக்ஷிதரின் கார் சர்மா வீட்டு வாசலில் வந்து நின்றது. உடனே சர்மா அந்தக் காரில் ஏறி தீக்ஷிதரின் வீட்டுத் திண்ணை அறைக்குப் போய்ச் சேர்ந்தார். மீண்டும் பேச்சுக்கள் தொடங்கின.

அன்று பேச்சு வெகு நேரம் நடந்தது. கடைசியில் கதவு திறந்து இரண்டு பேரும் வெளியே வந்ததும் என்ன தீர்மானமாயிற்று என்று கூடத்தில் இருந்த பெண்டுகள் விசாரித்தனர்.

"நாங்கள் இருவரும் தீக்ஷிதர் திட்டத்தை மூன்று மணி நாற்பத் தெட்டு நிமிஷம் விவாதித்தோம்" என்று தீக்ஷிதர் பதில் அளித்தார். சர்மாவை விசாரித்ததற்குக் "கொஞ்சம் பொறுக்கவேண்; பொறுத்தார் பூமி ஆள்வார் என்ற பழமொழியைக் கேட்டதில்லையா?" என்றார். அதாவது இதே அர்த்தம் கொண்ட சமஸ்கிருத சுலோகம் ஒன்றை ஒப்பித்தார்.

இதற்குப் பிறகு நான்கு நாட்கள் திண்ணை அறைப் பேச்சுக்கள் தொடர்ந்து நடந்தன. ஒரு நாளைக்குக் கால் மணி நேரத்துக்குள் கதவு திறந்து விடும். சில நாளைக்கு, இரண்டு, மூன்று மணி நேரத்துக்குப் பிறகுதான் கதவு திறக்கும். ஒரு நாள் இரண்டு பேரும் சிரித்துக் கொண்டே வெளியே வருவார்கள். இன்னொரு நாள் இரண்டு பேரும் 'உம்' மென்று முகத்தை வைத்துக் கொண்டு வெளியே வருவார்கள். ஒருவர் சிரித்துக்கொண்டு, இன்னொருவர் 'உம்' மென்று முகத்தை வைத்துக் கொண்டு வெளிவந்த நாட்களும் உண்டு.

ஒவ்வொரு நாளும் பேச்சு முடிந்த பத்து நிமிஷத்துக் கெல்லாம் தீக்ஷிதரிடமிருந்து சீல் வைத்த கடிதம் ஒன்று சர்மாவுக்குப் பறக்கும். அடுத்த பத்து நிமிஷத்துக் கெல்லாம் சீல் வைக்காத கவர் ஒன்று சர்மாவிடமிருந்து தீக்ஷிதருக்கு வரும்.

இதை யெல்லாம் வைத்துக் கொண்டு கூடத்தில் இருந்த பெண்டுகள், தினம் ஒரு ஜோஸ்யம் கூறுவார்கள்.

ஒரு நாள் "சர்மாவின் சிரித்த முகத்தைப் பார்த்தால் கல்யாணம் நடக்கும்போல் தோன்றுகிறது. ஆகவே அப்பளத்துக்கு உளுந்து நனைக்க வேண்டியதுதான்" என்று உளுந்தை நனைப்பார்கள்.

அடுத்த நாளே, "இன்று திண்ணை அறைப் பேச்சுக்கள் கால் மணி நேரந்தான் நடந்ததைப் பார்க்கும்போது கல்யாணம் நடக்காது என்று தோன்றுகிறது. ஆகவே நனைத்த உளுந்தைத் திரும்பவும் உலரப் போட வேண்டியதுதான்" என்று நனைத்த உளுந்தைத் திரும்ப உலரப் போடுவார்கள்.

இப்படியாகக் கூடத்தில் கூடியிருந்த பெண்களின் மனோநிலை அலையிடை அகப்பட்ட துரும்பென ஊசலாடியது. அப்பளத்துக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட உளுந்து இன்று நனைக்கப்படுவதும், அடுத்த நாளே உலர்த்தப் படுவதுமாகத் திக்குமுக்காடித் திணறித் திண்டாடியது.

கடைசியில் ஒரு நாள் வந்தது. அன்று திண்ணை அறைக் கதவு திறக்கப்பட்டது. வழக்கத்துக்கு மாறாக, இரண்டு பேரும் பெண்டுகள் கூடியிருந்த கூடத்திற்கு வந்தனர்.

"தீக்ஷிதர் திட்டம் என்ன வாயிற்று என்று இப்பொழுது தெரிவிக்கக்கூடிய

நிலையில் இருக்கிறோம். தீக்ஷிதர் திட்டம் முறிந்து விட்டது. அதற்குக் காரணம் நான்தான். இதோ அது சம்பந்தமான அறிக்கை" என்று ஒரு முழ நீள அறிக்கையைத் தீக்ஷிதர் நீட்டினர்.

"இல்லை, இல்லை. தீக்ஷிதர் திட்டம் முறிந்ததற்கு நான்தான் காரணம். அதைப் பற்றி இதோ என்னுடைய அறிக்கை" என்று இரண்டு முழ நீள அறிக்கையொன்றைச் சர்மா நீட்டினர்.



அடுத்த நாளே தீக்ஷிதருக்கும், சர்மாவுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்து பத்திரிகைகளில் வெளியாயிற்று :—

## தீக்ஷிதர் கடிதம்

அன்புள்ள சர்மாவுக்கு,

வரதக்ஷிணை வாங்கக்கூடாது என்ற தீவிர கொள்கையுடையவன் நான் என்பது தாங்கள் அறிந்ததே. ஆகவே தாங்கள் வரதக்ஷிணையாகக் கொடுக்கப் போகும் பணத்தையெல்லாம் சீர், செனத்திகளாகச் செய்ய வேண்டும் என்பதுதான் நான் சொல்லும் தீக்ஷிதர் திட்டம். இது விஷயமாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் திட்டமாகத் தெரிவிக்கக் கோருகிறேன்.

தீக்ஷிதர்

## சர்மாவின் பதில்

அன்புள்ள தீக்ஷிதருக்கு,

தங்கள் கடிதம் கிடைத்தது. வரதக்ஷிணைப் பணத்தையெல்லாம் பெண் பேருக்கு எழுதி வைக்க வேண்டும் என்ற கட்சியைச் சேர்ந்தவன் நான். தங்கள் திட்டத்துக்கும் என் கட்சிக்கும் ஒவ்வாது போல் தோன்றுகிறதே?

சர்மா

## தீக்ஷிதர் கடிதம்

அன்புள்ள சர்மாவுக்கு,

தங்கள் கடிதம். தயவு செய்து தங்கள் கட்சியைப் புனராலோசனை செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தீக்ஷிதர்

## சர்மாவின் பதில்

அன்புள்ள தீக்ஷிதருக்கு,

என் கட்சியைப் புனராலோசனை செய்வதற்கில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். சர்மா.

மேற்படி கடிதங்கள் வெளியான இரண்டு நாளைக்கெல்லாம் பின்வரும் தீக்ஷிதர் - சர்மா கூட்டு அறிக்கை வெளியாயிற்று :—

## தீக்ஷிதர்-சர்மா கூட்டு அறிக்கை

நிச்சய அறைப் பேச்சுக்கள் முறிந்ததற்குப் பல பொய்க் காரணங்கள் கூறப்படுவதால் உண்மையை விளக்குவது எங்கள் கடமையாகிறது. அதற்காகத்தான் இந்தக் கூட்டு அறிக்கையை விடுத்துள்ளோம். நிச்சயப் பேச்சுக்கள் முறிந்ததற்கு முக்கிய காரணம் தீக்ஷிதர் திட்டமும், சர்மாவின் கட்சியும் ஒவ்வாததுதான். அப்படி ஒவ்வாமற் போனதின் காரணத்தைக் கண்டுபிடிப்பதற்காகக் கூடிய சீக்கிரத்தில் மறுபடியும் ஒரு நிச்சய மகாநாடு நடைபெறும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். தீக்ஷிதர், சர்மா.



# இது என்ன வார்த்தை?

"காலக்ஷேபம்" என்றால் 'பொழுது போக்கு' என்றுதான் அர்த்தம். வடமொழியில் 'காலம்' — பொழுது, நேரம்; க்ஷிப் — கடத்துதல், போக்குதல். இப்பதம் நாளடைவில் ஆயுள் பர்யந்தம் போக்க வேண்டிய பொழுதாகிய வாழ்க்கை, ஜீவனம் என்பதையும், அதற்குக் காரணமான ஜீவனோபாயத்தையும் குறிக்கலாயிற்று.



"நேற்று பாகவதர் காலக்ஷேபம் செய்தார்" என்று சொல்லும்போது வீண் பொழுது போக்கினர் என்று அர்த்தமில்லை. 'ஸத் காலக்ஷேபம்' என்றால் நல்ல வழியில் பொழுதைப் போக்குவதைக் குறிக்கிறது. நம் நாட்டுப் புராணக் கதைகளைப் படிப்பதையும் கேட்பதையும் விட வேறு நல்ல வழி ஏது? 'கல்கி'யில் 'காலக்ஷேபம்' என்ற வார்த்தை சரியான அர்த்தத்தில் உபயோகிக்கப்படுகிறது. ஹாஸ்யத் துணுக்குகளைப் பொழுது போக்குவதற்குத்தானே படிக்கிறோம்? —கே. என். என்.



அது மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறதல்லவா!

...ஆம், களைப்பையும் போக்குகிறது!

...அதுமட்டுமா—ஆனந்தத்தையும் அளிக்கிறது!

தினசரி விநோலியா சோப்பை உபயோகித்து சுகத்தை விரும்பும் மனிதர்களைக் கேளுங்கள். அவர்கள் இது மிகவும் ஆச்சர்யமாக சுகமளிக்கும் என்றும், கோடைகாலத்தில் ஓர் சிறந்த வரம் போன்றதென்றும் சொல்லுவார்கள். அதனுடைய வெண்மையான நுரை குளிர்ச்சியையும், மலர்ச்சியையும் கொடுக்கிறது. அதனுடைய பிரத்யேகமான வாசனை சுகத்தை அளிக்கிறது. மிகவும் களைப்படைந்த நரம்புகளுக்கு உற்சாகத்தை ஊட்டுகிறது.




# விநோலியா ஒயிட் ரோஸ் ஸோப்பு

VINOLIA CO., LIMITED, LONDON,

AAA 139

# அவர்களுடைய தந்திரங்களை அறிந்து, அவர்களைத் தோற்கடியுங்கள்!




அதிக விலைகொடுக்க சிலர் இசைவாயிருப்பதால், [illegible] வியாபாரிகள், கையில் சரக்குகள் இல்லையென்று பாசாங்கு செய்கிறார்கள். அவர்களைப்பற்றி உடனேயே போலீசுக்குத் தெரிவியுங்கள். அவர்களுடைய கடைகள் சோதனை செய்யப்படும்.

# ப்லாக் மார்க்கெட்டுக்கு இடங் கொடாதீர்கள்

## அப்போது அது ஒழிந்து விடும்

இந்திய சர்க்கார் தகவல், ஒலிபரப்பு இலாகா வெளியீடு.




# எந்த நல்ல சந்தர்ப்பத்திற்கும்

சிநேகிதர்களின் கூட்டுறவு காலங்களில் டெனர் சிகரெட்டு உங்களெல்லாருக்கும் ஆனந்தத்தை அளிக்கும். டெனர் சிகரெட்டின் நறுமணத்தை சந்தோஷத்துடன் இக் காலங்களில் நீங்கள் அனுபவிப்பீர்கள். உங்களில் மெல்லிய தொண்டையுடையவர்கள் இதையே விரும்புவார்கள். உத்தரவாதமுள்ள 100% பொறுக்கின வர்ஜீனியா புகையிலைதான் டெனர்ஸ் செய்யப்படுகிறது. சுகம் நிறைந்த இந்த சிகரெட்டை நீங்கள் வாங்கி உங்கள் சிநேகிதர்களுடன் அனுபவித்துப் பாருங்கள்.

டி லக்ஸ் டெனர் சிகரெட்டு

ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**Tenor**

**is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD. LONDON.

Regd. No. M. 4392




ஸிம்ப்ஸன்



ஸிம்ஸன் முத்திரையுள்ள க்யாஸ்பிளாண்ட் வெளியில் புறப்படச் செய்யும் தன்மையுள்ளது, தவிர, க்யாஸிலிருந்து பெட்ரோலுக்கோ, க்யாஸும் பெட்ரோலும் சேர்ந்து ஓட்டுவதற்கோ, சுலபமாக மாற்ற பிரத்தியேகமாய்ச் செய்யப்பட்ட "ஸ்டான் ஸிம்கோ" "டியான் மிக்ஸிங் சேம்பர்" என்னும் கருவியை உடையது.

க்யாஸ் எவ்வளவு
பரிசுத்தமாக இருக்கிறதோ
அவ்வளவு மேன்மையான
உழைப்பு

ஸிம்ப்ஸன் & கம்பெனி, லிமிடெட்.
மவுண்ட்ரோடு. மதராஸ்.



1840ல் ஸ்தாபித்த ஓர் இந்திய தொழிற் சாலை

இன்றைய சிறந்த முதலீடு, நாஷனல் ஸேவிங்ஸ் ஸர்டிபிகேட்டுகள்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.